# ஸ்ரீ ராமாநுஜன் - 289





சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 25 | பரிதாவி௵ ஐப்பசிமீ 15—11—72ல் வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 1 |
|---|---|---|


## புத்தாண்டு பிறப்பு விண்ணப்பம்

அன்புடையீர்! இவ்வாண்டுக்காக வெளிவரவேண்டிய பன்னிரண்டு ஸஞ்சிகைகளும் சென்ற மாதத்தோடு பூர்த்தியாக வெளிவந்துவிட்டபடியால் இவ்விதழ் இருபத்தைந்தாமாண்டுக்கு முதல் ஸஞ்சிகையாகின்றது. இஃது ஐப்பசித் திருமூலத்தன்று வெளிவரும் பாக்கியம் பெற்றதனால், இத்திருமூலந்தானும் ஜகதப்யுதயைக மூலமாதலால் இதுதன்னில் புத்துயிர் பெறுகின்ற இப்பத்திரிகை இவ்வாண்டு முழுதும் பெற்று விளங்குமென்பதில் ஐயமில்லை. இப்பத்திரிகை கையில் கிடைத்தவுடனே பாக்யசாலிகள் கண்டபாடஞ் செய்ய வேண்டிய திருநாள் பாசுரம் இது காணீர்!

செந்தமிழ்வேதியர் சிந்தைதெளிந்து சிறந்து மகிழ்ந்திடுநாள்
சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசுபொலிந்திடுநாள்
மந்தமதிப்புவி மானிடர் தங்களை வானிலுயர்த்திடுநாள்
மாசறுஞானியர் சேரெதிராசர் தம்வாழ்வு முளைத்திடுநாள்
கந்தமலர்ப்பொழில் சூழ்குருகாதிபர் கலைகள் விளங்கிடுநாள்
காரமர்மேனி யரங்கநகர்க்கிறை கண்கள் களித்திடுநாள்
அந்தமில்சீர் மணவாளமுனிப் பரனவதாரஞ் செய்திடுநாள்
அழகுதிகழ்ந்திடு மைப்பசியில்திரு மூலம தெனுநாளே.

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்

# நம்பிள்ளை யுத்ஸவ அழைப்பு

ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதியின் திருமுன்பே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நம்பிள்ளைக்கு நாளது ஐப்பசிமீ 27உ (12—11—72) ஞாயிற்றுக்கிழமை திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகைமீ 6உ (21—11—72) செவ்வாய்க்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்திரத்தில் சாற்றுமுறையாகும். பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டு வேளைகளிலும் திவ்யப்ரபந்த ஸேவை கோஷ்டிகளும் ததீயாராதனமும் விசேஷ வைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும். ஆஸ்திகர்கள் அனைவரும் வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்கவேணும். இம்மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்துவரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தல வசதி முதலிய ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படும். ஸ்ரீ வைஷ்ணவ பக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக்கூடிய மஹோத்ஸவமிது.

சாற்றுமுறையன்று மாலை 3 மணிக்கு ஸ்ரீ யதோக்தகாரி எம்பெருமான் புறப்பாடு கண்டருளி நம்பிள்ளை ஸன்னிதியிலெழுந்தருளியிருந்து நடைபெறும். இரண்டாயிரம் ரூபாய் செலவில் விசேஷ வைபவங்களுடன் நடைபெற்று வருகின்ற இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து யதாசக்தி பொருள் உதவி புரிந்து ஆசார்ய ஸார்வ பௌமருடைய இம் மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

# முதலாழ்வாரின் அருளிச்செயலநுபவம்

ஐப்பசியில் திருவோணம் அவிட்டம் சதயமிவை பொய்கை பூதம் பேயாழ்வார்களாகிற முதலாழ்வார்கள் மூவரும் முறையே திருவவதரித்த திருநாட்களாதலால் இம் மூவரின் அருளிச்செயல்களில் ஒவ்வொரு பாசுரத்தையாவது எடுத்தநுபவிக்க விருப்பமிருப்பினும் பொய்கையாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியைமட்டும்யநுபவிப்போமிங்கு. (முதல் திருவந்தாதியில் 54ஆம் பாசுரம்)

அரவமடல்வேழம் ஆன்குருந்தம்புள்வாய்,
குரவை குடமுலைமற் குன்றம்—கரவின்றி
விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டு கோத்தாடி
உண்டட்டெடுத்த செங்கணவன்.

இச்சிறு பாசுரத்தில் கண்ணபிரானுடைய திவ்விய சரிதைகள் பத்து அநுபவிக்கப் பட்டுள்ளன. முன்னடிகளிலுள்ள அரவம் வேழம் முதலான பெயர்ச்சொற்கள் பின்னடிகளிலுள்ள விட்டு இறுத்து முதலிய வினையெச்சங்களோடு முறையே அந்வயித்துப் பொருள்பட நிற்றலால் வடமொழியில் யதாஸங்க்யாலங்காரமென்றும் தென்மொழியில் நிரனிறையணியென்றும் கூறுவர். [அரவம் விட்டு] காளியமர்த்தனம். [அடல் வேழம் இறுத்து] குவலயாபீடபஞ்ஜனம். [ஆன்மேய்த்து] கோபாலனென்ற திருநாமத்திற்குத் தகுதியாக ஆநிரை மேய்த்தது. [குருந்தம் ஒசித்து] அசுரனொருவன் ஆவேசித்திருந்த குருந்தமரத்தை முறித்தது. [புள் வாய் கீண்டு] பகாஸுரன் வாயைக் கீண்டது. [குரவை கோத்து] ராஸக்ரீடையாடினது. [குடம் ஆடி] *குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடினது. [முலையுண்டு] பேய்ச்சி முலையுண்டது. [மல் அட்டு] மல்லர்களை மடித்தது. [குன்றம் எடுத்து] கோவர்தனோத்தரணம் செய்தது. இங்ஙனே பத்து சரிதைகளை ஒரு பாட்டில் அடக்கியநுபவித்தது ஆச்சரியம்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# மணவாள மாமுனிகளின் திருநாவீறு.

## ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யதாஸன்.

*விசதவாக் சிகாமணிகளென்று விருதுசாத்துகைக்குறுப்பான திருநாவீறு பெற்றமாமுனிகள் ஸ்ரீஸூக்தி மாதுர்ய காம்பீர்யங்களைப்பற்றி எண்பத்திரண்டு வார்த்தைகள்.*

1. உபயவிபூதி நாதனுன எம்பெருமானுடைய லீலா விபூதியாகிய இவ்வுலகம் ஞானிகளால் இருள்தருமாஞாலமெனப்பட்டது. இருளைப் போக்குதற்குரிய அக்நி ஸூர்யன் சந்திரன் முதலிய தேஜஸ் பதார்த்தங்கள் பல பல இருந்தும் அவற்றால் போக்கவொண்ணாத அஜ்ஞாநாந்தகாரமே இங்கு இருள் எனப்பட்டது. அத்தகைய இருளைப் போக்குவதற்கு ¤புண்யாம்போஜ விகாஸாய பாபத்வாந்த க்ஷயாயச, ஸ்ரீமாந் ஆவிரபூத் பூமௌ ராமாநுஜ திவாகர: ¤ என்றபடி எம்பெருமானாராகிற விலக்ஷணஸூர்யன் இவ்வுலகில் திருவவதரித்து "கடலளவாய திசையெட்டினுள்ளுங் கலியிருளே, மிடைதரு காலத்திராமாநுசன்—மிக்க நான்மறையின் சுடரொளியால் அவ்விருளைத் துரந்திலனேல் உயிரையுடையவன் நாரணனென்று அறிவாரில்லையுற்றுணர்ந்தே" என்ற அமுதனாருளிச் செயலின்படியே மஹோபகாரம் செய்தருளும்படியாயிற்று.

2. "தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன், சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும், நான்மறையும் நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனர் நீணிலத்தே, பொற்கற்பகம் எம்மிராமானுசமுனி போந்தபின்னே" என்கிறபடியே ஸம்ஸ்க்ருத வேத பாஹ்ய குத்ருஷ்டிகளை யெல்லாம் தம்ஸூக்தி சரங்களாலே நிரஸித்தருளினார் அவ்வவதாரத்தில்

3. அன்றியும், "வான்திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ் மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்னும்படியாக ஆழ்வார்களின் அருளிச் செயல்களையும் ப்ரவர்த்திப்பித்தருளினார் எம்பெருமானார்.

4. அன்றியும், திவ்யதேசங்களையும் உத்தரிப்பித்து ஒருவாறு அவதார க்ருத்யத்தைத் தலைக்கட்டிக்கொண்டு சுடரொளிச் சோதிக்கு எழுந்தருளினபின், சிலகாலம் கடந்தபிறகு, அந்த எம்பெருமானார் தாமே மீண்டும் வைகுந்தநாதனுடைய திருவாணையினால் இந்நிலவுலகில் மணவாள மாமுனிகளென்கிற திருநாமத்துடனே திருவவதரித்தார்.

5. முன்னவதாரத்திற் செய்தருளின மஹோபகாரங்களிற்காட்டிலும் பன்மடங்கு அதிசயித்த க்ஷேமங்களைச் செய்தருளி இவ்விருள் தருமா ஞாலத்தைத் தெருள் தருமா ஞாலமாகத் திருத்திப் பணிகொண்ட அவ்வாசார்ய சிகாமணியின் எண்ணில் பல்குணங்களைக் கூறுதற்கு அவர் தம்முடைய நிஜரூபமான ஆதிசேஷனும் அசக்தன் என்கிற விது அதிசயோக்தியன்று.

6. 'பூர்வாசார்யர்' என்று இற்றைக்கும் நாம் வழங்கி வருமாறு பல பல மஹாசார்யர்களின் திருவவதாரத்தினால் புனிதமாய இவ்வுலகில்; அவ்வாசாரிய பரம்பரை மணவாள மாமுனிகளோடு முடிவு பெற்றிருக்கின்றது. மாமுனிகளுக்குப் பிறகும் பல பல மஹான்கள்

திருவவதரித்தாலும் 'பூர்வாசார்யர்கள்' என்கிற வ்யபதேசம் மாமுனிகளளவிலே விச்ராந்தமாயிருக்குமத்தனை.

7. எம்பெருமான் லோக ஸம்ரக்ஷணார்த்தமாகச் செய்தருளின விபவாவதாரங்களுள் இராமபிரானாகத் திருவவதரித்த காலத்தில் பல பேர்களிடத்திலே தான் பணிவுகாட்டிப் போந்தான். விச்வாமித்ர முனிவன், ஸுக்ரீவ மஹாராஜர் ஸமுத்ர ராஜன், ஸாந்தீபனி முனிவர் என்றிப்படிப் பல வ்யக்திகள் பக்கலிலே வணங்கி நின்றான்.

8. முதலில் விச்வாமித்ரருடைய சரித்திரங்களை உணராமல் 'இவர் ஒரு மஹர்ஷி' என்கிற ப்ரதிபத்தி மாத்திரமே கொண்டு ☼இமௌ ஸ்ம முநிசார்த்தூல! கிங்கரௌ ஸமுபஸ்த்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம்☼ என்று அவர்க்குச் சேவகனாய் நின்றான். பிறகு அஹல்யா சாபவிமோசனம் செய்தபின் சதாநந்தர் வாயிலாக அம்முனிவருடைய சரிதைகளை விரிவாகக் கேட்டபின் இங்ஙனே ராஜஸரும் தாமஸருமான இவரையோ நாம் ஆசார்யனாகக் கொள்ளப் பெற்றது! என்று திருவுள்ளக் குறையுற்றிருந்தான்.

9. பிறகு ஒருகால் ☼ஸுக்ரீவம் சரணம் கத:☼ என்னும்படியாக ஒரு குரக்கினத் தரசன் காலிலே விழும்படியாயிற்று. அவன்திறத்து ப்ரீதியும் நிலை நின்றிருந்ததில்லை: இளையோனை யனுப்பி ☼மா வாலிபதமந்வகா:☼ இத்யாதிகளாலே நிக்ரஹப்ரகாசனம் செய்ய வேண்டியதாயிற்று.

10. பிறகு ☼ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்து மர்ஹதி☼ என்ற விபீஷண வசனத்தின்படியே கடலரசன்பாடே சரணம் புகுந்து கிடந்தான். அங்கும் அப்ரீதியோடே தலைக்கட்டிற்று; ☼கோபமாஹாரயத் தீவ்ரம்—ஸாகரம் சோஷயிஷ்யாமி☼ இத்யாதிகள் காண்க.

11. பிறகு க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபநி பக்கலிலே சரணம் புகுந்து வித்யாக்ரஹணம் பண்ணினான்; அங்கு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்க விரும்பி 'என்ன அபேக்ஷிதம்?' என்று அவரைக் கேட்டபோது☼ஓது வாய்மையும் உவனியப் பிறப்பும் உனக்குமுன் தந்தவந்தணனொருவன்; காதலென்மகன் புகலிடங்காணேன் கண்டு நீ தருவாய் எனக்கென்று கோதில் வாய்மையினான் உனை வேண்டிய குறை முடித்து அவன் சிறுவனைக் கொடுத்தாய்☼ என்னும்படியாக அந்த ஸாந்தீபநி என்றைக்கோ மறிகடல்வாய் மாண்டுபோன தன்புதல்வனைக் கொணர்ந்து கொடுக்குமாறு வேண்டினார். இங்ஙனம் லௌகிகமான பலனை விரும்புகின்ற இவரை ஆசாரியனாகக் கொண்டோமே! யென்று அவரிடத்திலும் எம்பிரானது நெஞ்சம் அப்ரீதிகொண்டிருந்தது போலும்.

12. ஆக; விபவாவதாரங்களில் தான் தலைமடுத்தவிடமெல்லாம் தடுமாறிப்போகவே, பெருங்குறைவாளனான பகவான் அர்ச்சாவதாரத்திலாவது குறை தீர ஒரு ஸதாசார்ய ஸமாச்ரயணம் பெற்று வாழ்வோமென விரும்பி, ☼மாமுனி வேள்வியைக் காத்து அவப்ரத மாட்டிய அடுதிறலயோத்தி யெம்மரசாயும் ☼கோவலனாய் வெண்ணெயுண்டவனாயுமுள்ள அழகிய மணவாளனை திருக்கோலத்தில் ஆசார்யத்வ பூர்த்தியுள்ள மணவாள மாமுனிகள் பக்கலிலே சிஷ்ய வ்ருத்தியை ஸ்வீகரித்து க்ருதார்த்தனானான்.

13. இத்தகைய ஒப்புயர்வற்ற பெருமை வாய்ந்த மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியமுதக் கடல் ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கெல்லாம் ஜீவாதுவாகையாலே அந்த திவ்ய ஸூக்திகளெல்லாம் தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் அடியேனால் பன்முறையும் பிரசுரிக்கப்பட்டுள்ளன

14. ஆர்த்திப் பிரபந்தத்தில் (28)¤ பண்டுபல வாரியரும் பாருலகோருய்யப் பரிவுடனே செய்தருளும் பல்கலைகள் தம்மைக், கண்டதெல்லா மெழுதியவை கற்றறிந்தும் பிறர்க்குக் காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன்¤என்று ஸ்வாமி தாமே யருளிச்செய்தபடி ஏற்கனவே அவதரித்துள்ள பூர்வாசார்ய திவ்ய ஸூக்திகளை ப்ரவசனம் செய்தருள்வதிலேயே மிகுந்த அபிநிவேச முடையராய் ஸ்வதந்த்ரமாகச் சில க்ரந்தங்கள் இட்டருளத் திருவுள்ள முடையவ ரல்லரேயாகிலும் இவ்வுலகின் பாக்யபரிபாக மடியாக சிஷ்யர்களின் பிரார்த்தனைக் கிணங்கியும் பகவந் நியமனத்தை முன்னிட்டும் ¤தேனே பாலே கன்னலே யமுதேயான பல திவ்யக்ரந்தங்களையும் அருளிச் செய்தருளும்படியாயிற்று.

15. அவற்றின் விவரணம் வருமாறு:— பிள்ளை லோகாசார்ய ரருளிச்செய்த ரஹஸ்யங்களில் ஸ்ரீவசந பூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்கிற மூன்று ரஹஸ்யக்ரந்தங்கள் மிகச்சிறந்தவைகளும் ப்ரதானங்களுமாகையாலே அம்மூன்றுக்கும் வியாக்கியானமிட்டருளினார்.

16. பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அருளிச் செய்த ஆசார்ய ஹ்ருதயமென்னும் ரஹஸ்ய ரத்னத்திற்கு வியாக்கியான மிட்டருளினார்.

17. பெரிய வாச்சான்பிள்ளை நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக வியாக்கியான மருளிச் செய்திருந்தும் அதில் பெரியாழ்வார் திருமொழி முதற்பாசுரம் தொடங்கி "வாக்குத் தூய்மை யிலாமையினாலே மாதவாவுன்னை" (5—1—1) என்கிறவளவும் வியாக்கியானம் கரையானுக்கு இரையாகி துர்லபமாய் விட்டபடியாலே அவ்வளவுக்குத் தாம் வியாக்கியானமிட்டருளினார்.

18. இராமாநுச நூற்றந்தாதிக்குச் சுருக்கமான உரை செய்தருளினார்.

19. அருளாளப்பெருமா ளெம்பெருமானாரருளிச் செய்த ஞானசாரப் பிரமேயசாரங் களுக்குப் பொருத்தமான இதிஹாஸ புராண சுலோகங்களைச் சேர்த்தருளினார்.

20. கீதைக்குத் தாத்பர்யதீபமென்றொரு வியாக்கியானம் இட்டருளினார். (இது லுப்தம்

21. ஈடு முப்பத்தாறுயிரப்படிக்கும் தாமருளிய ரஹஸ்ய வ்யாக்கியானங்களுக்கும் பிரமாணத்திரட்டுகள் ஸங்க்ரஹித்தருளினார்.

22. திருவாராதன ப்ரயோகமொன்று திருவாய் மலர்ந்தருளினார். உபதேசரத்தின மாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி என மூன்று தமிழ்ப் பிரபந்தங்களருளிச் செய்தார்.

23. தேவராஜ மங்களம், யதிராஜ விம்சதி, காஞ்சீ திவ்ய தேசமுக்தகம் அருளிச் செய்தார். ஆகிய இவை மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளாக ப்ரஸித்தம்.

## மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திப் பெருமை

24. உலகில் ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்தவர்கள் பல ஆசார்யர்களுமுண்டு, எனினும், மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளின் மாதுர்யமும் காம்பீர்யமும் அர்த்தபுஷ்டியும் ரஸபுஷ்டியும் அநிதர ஸாதாரணமாகவேயிருக்கும். ¤நாமூலம் லிக்க்யதே கிஞ்சித் நாநபேக்ஷித முச்யதே¤ என்னும்படி யமைந்த வியாக்கியானம் மாமுனிகளொருவருடையதேயாம். வேறு எந்த ஆசிரியரும் இங்ஙனே வியாக்கியானம் அமைக்கக் கற்றிலர் என்றால் இது அதிச யோக்தியாகாது.

25. தத்வத்ரய வ்யாக்க்யானுதிகளிலே பல மதாந்தரங்களைக் கண்டித்து எழுதினாலுங் கூட ஒருவருடைய மனமும் நோகாதபடிக்கும், வ்யர்த்த தூஷண பரிஹாஸங்களைச் சிறிதும் புக விடாதபடிக்கும், எந்த இடத்தை யெடுத்தாலும் சாஸ்த்ரார்த்தமே கைகொள் கனியாகும் படிக்கும் 'ஸகல சாஸ்த்ர ஸாகர பாரங்கதர் இவரொருவரே' என்று திண்ணமாக எண்ணும் படிக்கும், அந்வயம், மயங்க வைத்தல் முதலிய தோஷங்களுக்குச் சிறிதும் இடமில்லாதபடிக்கும் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர் மாமுனிகளொருவரே.

26. ஸூத்ரம் போன்ற பிள்ளை லோகாசார்ய திவ்யஸூக்திகளுக்கு அவதாரிகை யிடுகிற அழகும் மூலத்திற்கு அர்த்தமருளிச் செய்கிற வைகரியும், ஆங்காங்கு அர்த்தங்களைப் பிண்டீகரித்து நிகமித்தருளுகிற அற்புதமும், மூலத்தில் ஸ்வோக்தி விரோத பரோக்தி விரோதாதிகள் தோற்றுமிடங்களிலே நயனம் செய்தருளுகிற நைபுணியும் ¤உள்ளுந்தோறும் தித்திக்கும்.

27. வஸ்துத: இவ்வாசிரியருடைய ஸூக்திகளை ஸேவித்த பின்பு இன்னொருவர் வாக்கில் கண் வைத்தால் ¤ஸ்திதேரவிந்தே மகரந்த நிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே¤ என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்திக்கு விருத்தமாகச் செய்கிறோமென்கிற எண்ண முண்டாகிறதேயன்றி வேறில்லை.

28. பலசொல்லியென்? மற்றையோருடைய நூல்களைக் காணும்போது அவரவர்களுடைய ஞானத்தை அளவிட்டு அறியும்படியாக வுள்ளது; மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களை ஸேவிக்குமளவில், திருவடியைப் பற்றிப் பெருமாளருளிச் செய்த திருவாக்கே நினைவுக்கு வருகின்றது.

29. ¤நாந்ருக்வேதவிநீதஸ்ய நாயஜுர்வேததாரிண:; நாஸாமவேதவிதுஷச் சக்யமேவம் ப்ரபாஷிதும். நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நம் அநேந பஹுதா ச்ருதம், பஹுவ்யா ஹரதாநேந ந கிஞ்சிதபசப்திதம்¤ இத்யாதி. இது வால்மீகி வாக்கு.

30. ¤இல்லாத வுலகத் தெங்கு மீங்கிவனிசைகள் கூரக் கல்லாத கலையும் வேதக்கடலுமே யென்னுங் காட்சி, சொல்லாலே தோன்றிற்றன்றே ஆர் கொலிச் சொல்லில் வல்லான்? வில்லார் தோளிளைய வீர! விரிஞ்சனோ விடைவலானோ?¤ என்பது கம்பர் வாக்கு. இந்த வாக்குக்களெல்லாம் உண்மையில் மாமுனிகள் விஷயத்திலேதான் பொருந்தக் காணலாமென்பது அநஸூயுக்களின் அநவத்ய ஸித்தாந்தம்.

31. எம்பெருமானார் ஸ்ரீ வைகுண்டகத்யத்தைத் தலைக்கட்டுமிடத்து ¤அம்ருத ஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத¤ என்றருளிச் செய்தார். ஸகல அவயவங்களும் அமுதக்கடலினுள்ளே ஆழ்ந்திருக்கப்பெறுகை ஸம்பவிக்குமாவென்று அடியேன் பலகால் ஆலோசிப்பதுண்டு. மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளை ஸேவிக்கும்போது தெளிவு பெறுவேன்.

32. ¤அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து¤ என்று ஆழ்வார் தாம் அருளிச்செய்த கணக்கிலே அறியாக்காலத்திலேயே அடியேன் மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்தியமுதக்கடலில் ஆழங்காற்படப்பெற்றவன். அஸ்மத்குலகூடஸ்தர் அருளிச் செய்த ஸ்ரீ வரவரமுனி சதகஸ்துதியைத் திருத்தகப்பனார் இளமையில் கற்பித்தபோது ¤ஸுராஹாராஸாரீகரணசணா யத்ஸூக்தி லஹரீகரீயஸ்தாம் ஸ்தோதும் ப்ரபவதி ந வாசஸ் பதிரபி ¤த்ராக்ஷாமதிக்ஷிபதி நிந்ததி மாகரந்ததாராம் ஸுதாரஸ ஜரீம் அதரீகரோதி¤ இத்யாதி ச்லோகங்களைச் சிந்தனை செய்தபோது 'இங்ஙனே அற்புதமாகப் போற்றப்படுகின்ற ஸ்ரீஸூக்திகளை எப்போது அனுபவிக்கப்பெறுவோம்!' என்று நெஞ்சிலே தோன்றிக்கொண்

டிருந்தது. அந்த பாக்யம் ஒரு காலவிசேஷத்தில்தானே ப்ராப்தமாகும். ப்ராப்தமான நன்றுள் முதலாக இன்றளவாக ¤உள்ளுந்தோறும் தித்திக்கும்¤ என்றல்லால் வேறென்றும் சொல்ல லாவதில்லை.

33. மாமுனிகளின் திவ்யஸூக்தி மாதுர்ய காம்பீர்யாதிகளைப்பற்றி அடியேன் பலகால் பலவிடங்களில் உபந்யஸித்தது தவிர பல வியாஸங்கள் எழுதியிருப்பவை உலகம் பரவியே யுள்ளனவாதலால் இப்போது அபூர்வமாக என்ன எழுதவேண்டியிருக்கிறது. ஆனாலும் அபூர்வமாகவே ஸாரமாக வொன்றெழுதுகின்றேன்.

34. மாமுனிகளருளிச்செய்த திருவாய்மொழி நூற்றந்தாதிக்குத் தனியனிட்ட வாசிரியர் ¤அல்லும்பகலுமனுபவிப்பார் தங்களுக்குச் சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தான் நல்ல மணவாளமாமுனிவன்¤ என்றார். இப்படியொரு தனியன் எந்த நூலுக்கும் தோன்றியதில்லை. ஸ்ரீஸூக்திகளை அல்லும்பகலும் அனுபவிக்கப்பெறுவார் ஆரேனுமுளரோ? நாடோறும் அதிக மாக அநுபவித்தால் இரண்டு மூன்று, நாலைந்துமணி காலம் அனுபவிக்கப்பெறலாம். மாமுனி களின் திவ்ய ஸூக்திகள் எத்தனை காலம் அநுபவித்தாலும் தெவிட்டாதவை.

35. பகவத்பாஷ்யகாரர் மூலத்திற்கு வியாக்கியானமாக அருளிச்செய்த ஸ்ரீ பாஷ்ய தீபஸாரங்கள் இருந்தாலும் பகவத்கீதைக்கு வியாக்கியானமாகவருளிச்செய்த பாஷ்யம் அவரு டைய வியாக்கியானத் திறமையை நன்கு விளக்கவல்லது. அபேக்ஷிதார்த்தங்களை அணுவளவும் விடாமலும், அநபேக்ஷிதார்த்தத்தை அல்பமும் புகவிடாமலும் அற்புதமாகவருளிச்செய்த திவ்ய க்ரந்தம் கீதாபாஷ்யம் என்று பரீக்ஷகபரிப்ருடர்கள் சொல்லிப் போருவர்கள்

36. மணிப்ரவாள ஸரணியில் வியாக்கியானங்கள் ¤பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச் சான் பிள்ளை தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை (வாதிகேஸரி) மணவாளயோகி முதலானோர் அருளிச் செய்தவையிருந்தாலும், சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் பண்ணத் தோன்றிய ரஹஸ்ய க்ரந்தங்களுக்கு வியாக்கியானங்களாக மணவாளமாமுனிகள் இட்டருளின ஸரணியை வேறு எந்த ஆசாரியரும் அணுமாத்ரமும் அநுகரிக்கவும் இயலாது.

37. திடீரென்று எந்த இடத்தையெடுத்து ஸேவித்தாலும் அந்த பங்க்தி ரசனைகள் தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுது மொத்தே¤ என்னும்படியாக இருக்குமேயல்லது, ஸாதாரணமென்னும்படியான ஸ்தலம் ஒன்று கூட இராது. ஸூத்ரம்போன்ற சூர்ணைகளுக்கு அவதாரிகையிட்டருளுமழகே அதிவிலக்ஷணமானது. மந்தமதிகளுக்கு மூலத்தில் தோற்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதும், மஹாமேதாவிகளுக்கும் தோன்றமாட்டாத ஆசங்கைகளை உத்க்ஷேபித்து அவலீலையாக அகற்றுவதும், ஸகலஸ்ம்ருதிதிஹாஸ புராணங்களிலிருந்தும், ஸ்ரீ பாஷ்ய ச்ருதப்ரகாசிகாதிகளிலிருந்தும், ஸாங்க்ய பௌஷ்கராதவப்ரகாசாதிகளின் க்ரந்தங் களிலிருந்தும், அஹிர் புத்ந்யஸம்ஹிதை, விஷ்வக்ஸேநஸம்ஹிதை, விஹகேந்த்ரஸம்ஹிதை லக்ஷ்மீதந்த்ரம்......என்னும் பல ஸம்ஹிதைகளிலிருந்தும் ப்ரமாணவசனங்களை அபரிமிதமாக அடுக்குவதும் அதிதராஸாதாரணங்களேயாகும்.

38. ¤அநேகவித ஸௌகரியங்களுண்டான இக்காலத்திலும் அருமைப்பட்டிருக்கும் பல க்ரந்தங்கள் மாமுனிகளுக்கு எப்படித்தான் கிடைத்தனவோ! என்று ஊஹிக்கவும் முடிய வில்லை.

39. நான்கு ரஹஸ்யங்களினுடையவும் வியாக்கியானங்களில் ஸ்வாமி உதாஹரித்தருளி யிருக்கும் ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களுக்கு அகராதியட்டவணை அடியேன் பதிப்பித்த ஸ்ரீமந்

வரவரமுனி க்ரந்த மாலையில் விளக்கிக்காட்டியிருக்கிறேன்: முமுக்ஷுப்படி வியாக்கியானத்தில் உதாஹரித்தருளின ப்ரமாண வசனங்கள் 189; தத்வத்ரயவியாக்கியானத்தில் உதாஹரித்தருளின ப்ரமாணவானங்கள் 542; ஸ்ரீவசநபூஷணவியாக்கியானத்தில் உதாஹரித்தருளினப்ரமான வசனங்கள் 492; ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தில் உதாஹரித்தருளின ப்ரமாணவசனங்கள் 555, ஆக ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்கள் மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களில் (1778) மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளன.

40. மாமுனிகளின் திவ்ய ஸூக்தி ஸூதாநிதியில் அடியேன் கண்டவொரு விலக்ஷணமான ப்ரக்ரியையை விஜ்ஞாபிக்கக் கேளீர். மாமுனிகள் ஆங்காங்கு தாம் அருளிச்செய்கிற அர்த்த விசேஷங்கள் வேறுசில ஆசாரியர்களின் க்ரந்தங்களிலுமிருந்தால் அந்த ஸ்தலங்களை யெடுத்துக்காட்டியருளாமல் விடமாட்டார். இந்த ப்ரக்ரியை இதர ஆசார்யர்களிடத்தில் காணவரிது.

41. இதர ஆசாரியர்கள் பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் காட்டிடுவது ஸ்வல்பமாகவே யிருக்கும். இருந்தாலும் அர்த்தங்கள் இதர ஆசாரியர்களுடையனவாயுமிருக்கும். ஆனால் அது விப்ரலம்பமன்று: அதுவொரு நடை என்று கொள்ள வேண்டியதாகும்.

42. "கேசித் ஏவமாஹு:; அபரே ஏவமாஹு:" என்று, பெயரைக் காட்டாமலும் ஆகரம் காட்டாமலும் (சிலர் சிலர் என்றே) எழுதிக்கொண்டு போவாருமுளர்.

43. மணவாளமாமுனிகளின் வியாக்கியான ப்ரக்ரியை இத்தகைத்தன்று. தாம் அருளிச்செய்யும் விஷயங்களுக்கு வேறு ஆசாரியர்களின் ஸம்வாதமிருக்குமிடங்களில் "இன்ன ஆசார்யர் இன்னவிடத்திலே இன்னபடியருளிச் செய்துள்ளார்" என்று அந்தந்த ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டியே தீருவர்.

44. இது மாமுனிகளின் திவ்ய க்ரந்தங்களுக்குத் தனிச்சிறப்பு. இதுகாரணமாகவே ☼பொய்யிலாத மணவாளமாமுனி புந்திவாழி☼ என்கிற வாழ்த்து அமைந்தது.

45. மாமுனிகளின் வியாக்கியானங்களில் எந்தெந்த ஆசாரியர்களின் ப்ரஸ்தாவமுள்ளது என்பதை யாவரும் சிரமப்படாமல் தெரிந்துகொள்வதற்கு இதன் கீழே ஒரு பட்டிகை காண்க.

1. ஆளவந்தார்.
2. பெரியநம்பி.
3. திருக்கோட்டியூர்நம்பி.
4. எம்பெருமானார்.
5. எம்பார்.
6. வங்கிப்புரத்துநம்பி.
7. கூரத்தாழ்வான்.
8. திருவரங்கத்தமுதனார்.
9. உய்யக்கொண்டார். (பிற்பட்டவர்)
10. திருக்கண்ணமங்கையாண்டான்.
11. பட்டர்.
12. ஸ்ரீ ஸேநாபதி ஜீயர்.
13. கிடாம்பிப் பெருமாள்.
14. முதலியாண்டான்.
15. பிள்ளை திருநறையூரரையர்
16. வடுகநம்பி.
17. எங்களாழ்வான்.
18. நஞ்சீயர்.
19. நம்பிள்ளை.
20. நடாதூரம்மாள்.
21. ச்ருதப்ரகாசிகாபட்டர்.
22. வடக்குத் திருவீதிப் பிள்ளை.
23. பெரியவாச்சான் பிள்ளை.
24. ஆச்சான் பிள்ளை.
25. நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர்.
26. அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.
27. வேதாந்தவாசிரியர்.
28. வில்லிபுத்தூர்ப்பகவர்.
29. வேதாசார்யபட்டர்.
30. வாதிகேஸரி ஜீயர்.

46. இவ்வாசிரியர்கள் முப்பதின்மரில், பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, வங்கிப்புரத்துநம்பி, எம்பார், (உடையவர்காலத்து) உய்யக்கொண்டார், திருக்கண்ணமங்கையாண்டான், ஸ்ரீ ஸேநாபதி ஜீயர், கிடாம்பிப்பெருமாள், முதலியாண்டான், பிள்ளை திருநறையூரரையர், வடுகநம்பி வேதாசார்யபட்டர், வில்லிபுத்தூர்ப்பகவர் என்னும் பதின்மூவருடைய ப்ரஸ்தாவம் பெரும்பாலும் மூலத்திலிருந்துகொண்டும், சிறுபான்மை ப்ராஸங்கிகமாக வருவது

கொண்டும் அமைக்கப்பட்டது. இவ்வாசிரியர்கள்தாம் க்ரந்தங்களையருளிச்செய்திருந்து அவற்றிலிருந்து உதாஹரித்தருளின ஸ்ரீ ஸூக்தி ஏதுமில்லை. இவற்றைச் சிறிது விளக்கிக்காட்டுகிறேன்.

47. *பெரியநம்பியின்* ப்ரஸ்தாவம் ஸ்ரீவசனபூஷணத்தில் (சூர்ணிகை) 234லும், ஆசார்ய ஹ்ருதயத்தில் 85லும் மட்டுமேயுள்ளது. மூலத்திலுள்ளது வியாக்கியானத்தில் விவரிக்கப்பட்ட தத்தனை. இரண்டிடத்திலும் விஷயமொன்றே.

48. *திருக்கோட்டியூர் நம்பியின்* ப்ரஸ்தாவம்—முமுக்ஷுப்படி சரமச்லோகப்ரகரணத்தின் வியாக்கியானவதாரிகையிலே "இதிலர்த்தம் கேட்கைக்காகவிறே எம்பெருமானார் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பிபக்கல் எழுந்தருளிற்று.........இத்யாதி. ஸ்ரீவசனபூஷணத்தில் (73,) ❊அஹமர்த்தத்துக்கு❊ இத்யாதி சூர்ணையின் வியாக்கியானத்திலே "திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீ பாதத்திலே ஆழ்வான் ஆறுமாஸம் ஸேவித்து நின்று மஹாநிதியாகப் பெற்ற அர்த்தமிறே இது." என்றது 3.

49. *எம்பாருடைய* ப்ரஸ்தாவம்—முமுக்ஷுப்படி முடிவில் "ஆஸ்திகனாய் இவ்வர்த்தத்தில் ருசிவிச்வாஸங்களுடையனாய் உஜ்ஜீவித்தல் நாஸ்திகனாய் நசித்தலொழிய நடுவில் நிலையில்லையென்று பட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை." என்றுள்ள ஸ்ரீஸூக்தியின் விவரணம் காண்க. இஃது ஓரிடமே எம்பாரைப் பற்றியது.

50. *வங்கிப்புரத்து நம்பியின்* ப்ரஸ்தாவமும் முமுக்ஷுப்படி முடிவில் ❊இதுதான் அநுவாத கோடியிலே யென்று வங்கிப்புரத்துநம்பி வார்த்தை❊ என்ற மூலமும் வியாக்கியானமுமான ஓரிடமே

51. *(உடையவர் காலத்து)* உய்யக்கொண்டாருடைய ப்ரஸ்தாவம் முமுக்ஷுப்படி முடிவில் ❊உய்யக்கொண்டாருக்கு உடையவருளிச் செய்ததாக ஓரிடமும்; ஸ்ரீ வசநபூஷணத்தில் (சூ. 3.) "இனிஹாஸபுராணயோ: இதிஹாஸா பலீயாம்ஸ:" என்று தொடங்கி தத்வ நிர்ணயத்திலே உய்யக்கொண்டாராலும் ப்ரதிபாதிக்கப்பட்டது." என்று மற்றோரிடமும். (இந்த க்ரந்தம் இப்போது கிடைப்பதில்லை).

52. *திருக்கண்ணமங்கையாண்டான்* ப்ரஸ்தாவம். ஸ்ரீவசநபூஷணத்தில் (சூ. 82.) "திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான்" என்றவிடத்து வியாக்கியானம் ஓரிடமே,

53 *ஸ்ரீஸேநாபதி ஜீயர்* ப்ரஸ்தாவம், (முமுக்ஷுப்படி-41.) ❊அத்ர பகவத்ஸேநாபதி மிச்ரர்வாக்யம்❊ என்றவிடத்து வியாக்கியானமோரிடமே.

54. *கிடாம்பிப்பெருமாள்* ப்ரஸ்தாவம், (ஸ்ரீவசனபூஷணம்-385ல்) "பாஷ்யகாரர் காலத்திலே ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக முதலிகளெல்லாரும் திரளவிருந்தவளவிலே இவ்வர்த்தம் ப்ரஸ்துதமாகப் பின்பு பிறந்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்றவிடத்து வியாக்கியானத்தில் "*கிடாம்பிப்பெருமாள் இருந்தவர்*" என்ற ஓரிடமே.

55. *பிள்ளை திருநறையூரரையர்* ப்ரஸ்தாவம், மேலே கிடாம்பிப்பெருமாள் ப்ரஸ்தாவம் காட்டினவிடமொன்றும், (ஸ்ரீவசநபூஷணத்திலேயே 84.) பிள்ளை திருநறையூரரையர்

உடம்பையுபேக்ஷித்த கதையின் விவரண ஸ்தலமொன்றுமாக இரண்டிடம்.

56, 57. *முதலியாண்டான், வடுகநம்பிகளின்* ப்ரஸ்தாவம், (ஸ்ரீவசநபூ. 411) "வடுக நம்பி ஆழ்வானையும் ஆண்டானையும் இருகரையரென்பர்" என்றவிடத்ததொன்றே.

58. **வேதாசார்ய பட்டர்** ப்ரஸ்தாவம், (ஆசார்ய ஹ்ருதயம் 53.) "புரவியேமொரு காலுடைய தேரிலே" இத்யாதி சூர்ணையின் முடிவில் "வேதகுருபதேசம்" என்றவிடத்து வியாக்கியானம் ஓரிடமே. மூலத்தில் *வேதகுரு*வென்றதற்கு வேதாசார்ய பட்டரென்று விவரணமுள்ளது. வேதவ்யாஸபட்டரென்கிற சீராமப்பிள்ளையின் திருக்குமாரரிவர்.

59. *வில்லிபுத்தூர்ப்பகவர்* ப்ரஸ்தாவம், (ஆசார்யஹ்ருதயம் 32.) "ஸாதநஸாத்யங்களில் முதலும் முடிவும் வர்ணதர்மிகள் தாஸவ்ருத்திகளென்று துறைவேறிடுவித்தது" என்றவிடத்து வியாக்கியானமும். ஞானஸாரத்தில் (13) பாட்டின் ப்ரமாணயோஜனையும் காண்க. ஆக இப்பதின்மூவர் தவிர சேஷித்துள்ள ஆசிரியர்கள் பதினெழுவர். ஆளவந்தார் முதலாக வாதிகேஸரி ஜீயரளவான இப்பதினெழுவர் ஸ்ரீஸூக்திகள் உதாஹரிக்கப்பட்டுள்ளவிடங்களுக்கு விவரணம் காட்டுகிறேன் காண்மின்.

60 *ஆளவந்தார்*=இவருடைய ஸ்ரீஸூக்திகள் தத்வத்ரயே 4. ஸ்ரீவசநபூஷணே 4 ஆசார்யஹ்ருதயே 2. ஆக பத்து ஸ்தலங்களில் அந்தந்த சூர்ணிகைகளின் லக்கம் வருமாறு:—(தத்வ) 3, 45, 70, 92, (இவற்றுள் 70-ல் ஸித்தித்ரயகாரிகை. மற்றவற்றில் ஸ்தோத்ரரத்ந ஸூக்திகள். (ஸ்ரீ வசநபூஷணே) 182. 259, 323. 380. (ஆசார்ய ஹ்ருதயே) 66, 87, 151.

61. *எம்பெருமானார்*—முமுக்ஷு. 97. 183 243. 274. (தத்வத்ரயே.) 3. 10. 15. 18. 34. 35. 47. 40. 41. 45. 79. 85. 92. 117. 129. 130. 132. 141. 195. (ஸ்ரீவசநபூஷணே.) 96. 146. 160. 180. 234 274. (ஆசார்யஹ்ருதயே.) 36. 65. 66. 85. 91. 99. 153. 155. 162. 204. 224. 228. 233.

62. *கூரத்தாழ்வான்*. (தத்வத்ரய) 45. 79. 148. 185. 194. 195. (ஸ்ரீவசநபூஷணே) 73. 203.

63. *திருவரங்கத்தமுதனார்*. ஸ்ரீவசநபூஷணே. 526.

64. *பட்டர்*. (முமுக்ஷுப்படி) 2. 46. (தத்வத்ரயே) 28. 45. 148. 150. 160. 179. 202. (ஸ்ரீவசநபூஷணே) 3. 5. 8. 38. 306. (ஆசார்.) 1.

65. *எங்களாழ்வான்*. (தத்வத்ரயே) 103, 106, 109 ஸ்ரீ விஷ்ணுபுராண வ்யாக்க்யாநாத்

66. *நஞ்சீயர்*. (தத்வத்ரயே) 142 கத்யவ்யாக்க்யாநோதாஹரணம். (ஸ்ரீவசந.) 69. 192.

67. *நம்பிள்ளை* (ஸ்ரீவசநபூ.) 31 347 (ஆசார்.) 85.

68. *நடாதூரம்மாள்*=(தத்வத்ரயே) 25 (ஸ்ரீவசந) 381.

69. ச்ருதப்ரகாசிகாபட்டர். (தத்வத்ரய) 49, 89, 103, 109, 116, 148. ச்ருத ப்ரகாசிகையிலிருந்தும், ஸுபாலோபநிஷத் வ்யாக்யானத்திலிருந்தும், சுகபக்ஷீயத் திலிருந்தும்.

70. வடக்குத்திருவீதிப்பிள்ளை. (ஸ்ரீவசநபூ.) 443. (ஆசார்.) 228.

71. பெரியவாச்சான்பிள்ளை. (தத்வத்ரயே) 103. பெரியவாச்சான்பிள்ளையென்று ஸ்பஷ்ட நிர்தேசமுள்ளது இவ்விடமொன்றே. பூருவர்களருளிச்செய்ததென்று சிலவிடங்களிலுண்டு.

72. ஆச்சான்பிள்ளை. (முமுக்ஷு) 12, 97, 99. (த்வய-அவதாரிகை) (தத்வத் ரயே.) அவதாரிகை, 3. 35. 103. 124. 142. 149. 181. (ஸ்ரீவசந) 11. 49. 332. (ஆசார்.) 99.

73. நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர். (தத்வத்ரயே) அவதாரிகை, 120. 151. 160. (ஸ்ரீவசநபூ.) 5 (ஆசார்.) 85.

74. அழகிய மணவாளப்பெருமாள்நாயனர். (முமுக்ஷு) 129. (தத்வத்ரயே.) 46. (ஸ்ரீவசந) 159. (ஆசார்.) 103, 113, 127—இந்த மூன்றிடங்களிலும் பட்டோலையி லிருந்து உதாஹரணம்.

75. வேதாந்தவாசிரியர். (முமுக்ஷு) 6. ந்யாஸவிம்சதி ச்லோகம். (தத்வத்ரயே) 39, 82. ரஹஸ்யத்ரயஸாராத் 80. தத்வமுக்தாகலாபாத்.

76. வாதிகேஸரி ஜீயர். (முமுக்ஷு.) 75 த்வயப்ரகரணுவதாரிகை (தத்வத் ரயே.) 35. 103. (ஸ்ரீவசந.) 6, 381.

77. ஆக ஆளவந்தார், எம்பெருமானுர், கூரத்தாழ்வான், அமுதனுர், பட்டர், எங்களாழ்வான், நஞ்சீயர், நம்பிள்ளை, நடாதூரம்மாள், ச்ருதப்ரகாசிகா பட்டர், வடக்குத்திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, ஆச்சான்பிள்ளை, நடுவில்திருவீதிப்பிள்ளை, அழகியமணவாளப்பெருமாள், வேதாந்தவாசிரியர், வாதி கேஸரி ஜீயர்—என்னுமிவ்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள் (123) நூற்றிருபத்து மூன்று ஸ்தலங்களில் கையாளப்பட்டுள்ளன. ஒன்பது இடங்களில் ஸ்ரீஸூக்த்யுதா ஹரணமின்றிக்கே திருநாம ப்ரஸ்தாவமாத்ரம். மூன்றிடங்களிலே திருநாமமும் எடாமல், ஆகரமும் காட்டாமல் ஸ்ரீஸூக்திமாத்ரோதாஹரணம்.

78. ஸ்ரீவசனபூஷணம் 457ல் "நல்லபுதல்வர் இத்யாதியாலே அருளாளப் பெருமாளெம்பெருமானுருமருளிச்செய்தார்". அதிலேயே (449ல்) "அம்புதத்தைப் பார்த்திருப்பானற்று என்றும் சொல்லக்கடவதிறே" என்று ஞானஸாரப் பாசுரத்தை யுதாஹரித்தவளவே; ஆசிரியர் திருநாமமுமில்லை, நூலின் திருநாமமுமில்லை.

79. நான்கு ரஹஸ்ய வ்யாக்கியானங்களிலும் ஸம்ஸ்க்ருத ப்ரமாண வசனங் கள் 1778 என்று ஏற்றத்தாழ்வின்றி யெடுத்துக்காட்டியதுபோல் திவ்யப்ரபந்த மேற்கோள்களைப் பற்றியும் கணக்கு காண்மின்.

| | | | |
|---|---|---|---|
| 1. | முமுக்ஷுப்படி வியாக்கியானத்தில் | ... | 108 |
| 2. | தத்வத்ரய வியாக்கியானத்தில் | ... | 42 |

3. ஸ்ரீவசனபூஷணவியாக்கியானத்தில் ... 276
4. ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தில் ... 1903

ஆக (2329) இரண்டாயிரத்துமுன்னூற்றிருபத்தொன்பது அருளிச்செயற் சந்தைகள் நான்கு ரஹஸ்ய வ்யாக்கியானங்களிலும் கையாளப்பட்டிருக்கின்றனவென்று தேற்றிற்று. இவற்றை உதாஹரிக்குமிடங்களில் (என்கிறபடியே) என்றெழுதிச் செல்லாமல் உதாஹரித்த அளவுக்குப் பொருளும் அருளிச் செய்து போருகிறார். இல்லையேல் எடுத்த சந்தைகள் பயன்படாதனவாகுமன்றோ. காலக்ஷேபபரர்கள் வியாக்கியானங்களைத் தேடியெடுத்துப் பார்த்தன்றோ பொருளுணரவேண்டிய தாகும். அந்த ப்ரயாசத்திற்கு இடமில்லாதபடி தாமே சோம்பாமல் பொருள் விளக்கமும் செய்தருள்வது மாமுனிகளுக்கு அஸாதாரணமான இயல்வு. வ்யக்தமாகப் பொருள் தெரியக்கூடிய இடங்களில் (என்கிறபடியே) என்றுவிட்டிட்டாலும், நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு பொருள் விளக்கியே யருளுகிறார். ஆசார்யஹ்ருதய வ்யாக்கியானத்தில் இதை மிகையாகக்காணலாம். இதில் குறிக்கொள்ள வேண்டிய பெரிய விசேஷமொன்று (அதாவது) தாம் எழுதியருளும் பொருளெல்லாம் பூர்வாசார்ய வ்யாக்கியான. பங்க்தியாகவேயிருக்குமத்தனையல்லது தாமாக எழுதுவதாயிராது. நன்னூலில் "முன்னோர்மொழி பொருளேயன்றி அவர்மொழியும் பொன்னேபோல் போற்றுவம்." என்றதற்கு இணங்குமிது. உபதேசரத்தினமாலையில் "முன்னோர்மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே........."என்றருளிச்செய்தவர் மாமுனிகள் ஒருவரேயன்றோ. இது விசேஷமன்று. இதனில் விஞ்சிய விசேஷம் கேளீர்.

80. மூலகாரர்களான பிள்ளைலோகாசார்யரும் திருத்தம்பியாரும் தாங்கள் (மூலத்தில்) உதாஹரித்தருளுகிற பாசுரங்களுக்குப் பூர்வாசார்ய வ்யாக்கியானங்களில் காணாத பொருளையும் பாடத்தையும் திருவுள்ளம் பற்றியிருப்பதுண்டு; அவ்விடங்களில் "இங்கு பூர்வாசார்ய வ்யாக்கியானம் இங்ஙனன்றிக்கே யிருந்தாலும் பரமாப்தரானவிவர் இப்படியருளிச்செய்கையாலே........." என்று ஸாதிப்பதுண்டு. இப்படி ஒன்பது இடங்களில் காண்கிறோம். இரண்டிடங்களைமட்டும் காட்டுவோமிங்கு. தத்வத்ரயத்தில் (180)ல் எம்பெருமான் ஸவிக்ரஹனாய்க்கொண்டு ஸ்ருஷ்டிக்குமென்றருளிச்செய்ய விரும்பி அதற்கு "முன்னீர் ஞாலம் படைத்த என்முகில் வண்ணனே" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை ப்ரமாணமாகக் காட்டினர் பிள்ளை லோகாசார்யர். அங்கு மாமுனிகள் தமது வியாக்கியானத்தில் "முகில் வண்ணனென்கிறவிது ஒளதார்யகுணபரமாக வ்யாக்யாதாக்கள் பலரும் வ்யாக்யாநம் பண்ணினார்களேயாகிலும், விக்ரஹபரமாகவிவர் அருளிச்செய்கையாலே இங்ஙனுமொரு யோஜனையுண்டென்று கொள்ளவேணும்; ஒன்றுக்குப்பல யோஜனையுமுண்டாயிறேயிருப்பது" என்றருளிச்செய்தார். மற்றோரிடம்—ஸ்ரீவசநபூஷணத்தில் 399. "எதிர்சூழல்புக்கு" இதுவும் திருவாய்மொழிப்பாசுரம். இதை வ்யாப்திபரமாகக் கொண்டு உதாஹரித்தருளினர் பிள்ளைலோகாசார்யர். இங்கு வியாக்கியானத்தில் மாமுனிகள் "எதிர்சூழல் புக்கென்கிறது அவதாரபரமாக மற்றுமுள்ளாராலே வ்யாக்யாதமாயிற்றுகிலும் இப்போதிவர் இவ்விடத்தில் வ்யாப்திபரமாக வருளிச்செய்கிறார். அநேக யோஜனைகளுண்டாயிறே யிருப்பது" என்றருளிச் செய்துள்ளார்.

81. ஆசார்யஹ்ருதயத்திலும் ஒன்று காட்டுவோம். அதில் (50) ''பண்ணுர் பாடல் பண்புரையிசைகொள் வேதம் போலே'' என்றவிடத்து வியாக்கியானத்தில் ''வியாக்கியானங்களில் 'பண்புடைவேதம்' என்ருெழிய 'பண்புரை வேதம்' என்ற பாடமும் 'இசைகொள்வேதம்' என்கிறதுக்கு ஸாமவேத பரத்வமும் கண்டதில் லையேயாகிலும் ஆப்ததமரானவிவர் இப்பிரபந்தத்திலே இப்படி யருளிச்செய்கை யாலே இப்படியும் கொள்ளவேணும்.'' என்றுள்ளது. இவற்ருல் ஆர்த்திப்பிரபந் தத்தில் ''முன்னவராம் நம்குரவர் மொழிகள் உள்ளப்பெற்ருேம் முழுது நம்க்கவை பொழுதுபோக்காகப் பெற்ருேம்''. என்று மாமுனிகள் தாமே யருளிச்செய்தது ஸத்யாபிதமாகிறது.

82. இவையெல்லாவற்றிற்கும் மேற்பட வொன்று கேளீர்;—ஸகல சாஸ்த் ரங்களிலும் ஆழ்ந்த வ்யுத்பத்திபெற்றிருப்பவர் மாமுனிகளொருவரேயென்று துணிந்து சொல்லலாம். சாஸ்த்ரங்களை எவ்வளவும் வாசித்துவிடலாம். சதுஸ்தந்த்ர பாராவார பாரீண: என்று விருதும் வஹிக்கலாம். ''அப்திர்லங்கித ஏவ'' என்கிற ரீதியிலன்றிக்கே ''ஆழியுள்புக்கு முகந்து'' என்னும்படியாக, விஷயங்களில் சிறுமை பெருமை பாராதே ஒவ்வொன்றையும் ஆழ்ந்து நோக்குகை மாமுனிகளின் வியாக்கி யானங்களிலன்றி வேறெங்கும் காணமுடியாது. இதற்கு நூறிடங்கள் காட்டலா மாயினும் ஓரிடமே காட்டுகிறேனிங்கு. ஸ்ரீபாஷ்யத்தில் (ஸூ 171) ''லோகவத்து லீலாகைவல்யம்.'' என்ற ஸூத்ர பாஷ்யத்தில் ஜகத்ஸர்கே லீலைவ கேவலா ப்ரயோ ஜநம்,'' என்றும் ''பரஸ்ய ப்ரஹ்மணோ லீலைவ ப்ரயோஜநம்'' என்றும் ஸ்ரீ ஸூக்தி விந்யாஸமுள்ளது. இதையனுஸரித்துப் பிள்ளைலோகாசார்யரும் தத்வத்ரயத்தில் (162) ''ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் கேவலலீலை'' என்றருளிச்செய்தார். இதில் எந்த வித்வானுக்கும் எவ்விதமான விசிகித்ஸையும் எளிதாகத் தோன்றமாட்டாது. ஆனல், இங்கு மாமுனிகளின் ப்ரஜ்ஞா விசேஷம் ஆராய்ச்சி செய்யப்புகுந்தவிதம் நிருபண நிபுணர்களால் உற்று நோக்கத்தக்கது. ஸ்ருஷ்டிதான் லீலா ரூபமேயொழிய ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜனம் லீலையென்று சொல்லுவது ஸமந்விதமாகாதென்று நிரூபித்தருளி ஸமந்வயம் செய்தருளியிருப்பதை ''ஸாரந்து ஸாரஸ்வதம் ஜானீதே நிதராம்.'' என்னப்பிறந்தவர்கள் பரிசீலிக்கவேணும். இங்ஙனே தொட்ட தொட்ட விடங்களெங்கும் துரூஹசாஸ்த்ரார்த்த சர்ச்சைகளே மலிந்திருக்கும். ஸ்ரீமத் வரவர முனீந்த்ர திவ்ய ஸூக்தி ஸுதாநிதியில் ''கோ மஜ்ஜதோரணுகுலாசலயோர் விசேஷ:'' என்ற கணக்கிலே அறிவிலியான அடியேன் போல்வாரும் மஹாப்ராஜ் ஞர்களென்றிருப்பாரும் ஸமசீலர்களே யென்னத்தட்டில்லை.

ஏறக்குறைய அறுபது சூர்ணைகளின் வ்யாக்கியானத்தில் (அன்றிக்கே) என்றும் (அதவா) என்றும் தொடங்கி யோஜநாபேதங்கள் காட்டியருளுகிருர். அவ்விடங் களில் முந்தின யோஜனைக்கும் பிந்தின யோஜனைக்கும் வாசியறிவதும் காரணமறி வதும் குருமுகமாகக் கேட்டவர்களுக்கன்றி மற்றையோர்க்கு இயலாது.

கிம் பஹுநா? திராவிட பாஷையிலமைந்த கிரந்தங்களென்று நாமமாத் ரமேயாய் ஸகல சாஸ்த்ரார்த்த ஸாரநிதியாய் விளங்கும். ஸ்ரீ ஸ்வாமியின் திவ்ய ஸ்ரீஸூக்திமாலையை அர்ச்சா மூர்த்திகளைப்போலே கோயிலாழ்வாரில்வைத்து ஆரா திக்க வேணுமென்றே ஆஸ்திகபக்தர்கள் ஆர்வங்கொள்ளவேணுமென்று விஜ்ஞா பித்து நிற்கிறேன்.

——: X :——

# ஐப்பசித் திருவோண நன்னாளனுபவம்

ஆழ்வார்களில் முதல்வரான பொய்கையாழ்வாருடையவும், ஆசாரியர்களில் அதிச்ரேஷ்டரான பிள்ளைலோகாசாரியருடையவும் திருவவதாரத்தினுல் புனித மான நன்னுள் ஐப்பசித் திருவோணம். இப்போதிங்கு பிள்ளைலோகாசார்யருடைய பிரபாவத்தைச் சுருக்கமாக வநுபவித்து அவருடைய திவ்யஸூக்திகளில் அரிய பெரிய சில சூர்ணைகளைத் தாத்பர்யஸாரத்துடன் அநுபவித்தும் அநுபவிப்பித்தும் மகிழ்வோம்.

## ஸ்ரீ லோகாசார்ய வைபவ சுருக்கம்

வடக்குத் திருவீதிப்பிள்ளைக்குத் திருக்குமாரர்கள் இருவர். மூத்தவர் பிள்ளை லோகாசார்யர்; இளையவர் அழகியமணவாளப் பெருமாள் நாயனுர். இவ்விரு வரும் நைஷ்டிக ப்ரஹ்மசாரிகள். ஐப்பசியில் திருவோணத்தன்று அவதரித்த பரம காருணிகரான பிள்ளை லோகாசார்யருடைய பெருமையைச் சிறிது பேசி மகிழ் வோம். இவருடைய ஜ்ஞாநாநுஷ்டானப் பெருமைகள் ஒரு புறமிருக்க, பரம கருணையின் திறத்தை என்னென்று பகர்வது?

ஆசாரியர்கள் பொதுவாக இருவகைப்படுவர்கள். அநுவ்ருத்தி ப்ரஸந்நா சார்யரென்றும், க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்றும். சிஷ்யர்கள் பலகால் துவண்டு வேண்ட அதனுலே அநுக்ரஹிப்பவர்கள் அநுவ்ருத்திப்ரஸந்நாசார்யர்க ளாவர்கள். சிஷ்யப்ராத்தனையைச் சிறிதும் எதிர்பாராமல் தம்முடைய இயற்கை யின்னருளால் தாமாகக் கனிந்து *பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன் ருகத் திருத்திப்பணி கொள்வதையே விரதமாகக் கொண்டு தம் பேருக அநுக்ரஹித் தருள்பவர்கள் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யர்கள். நமது ஆசார்ய கோஷ்டியில் எம்பெருமானுர் தாம் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்ற பட்டத்தை முதன்மை யாகப் பெற்றவர். ஆயினும் அவர் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு க்ரந்தமும் அருளிச்செய்திலர். ப்ரஹ்மஸூத்ரங்களின் அர்த்தங்களை விவரிக்க மூன்று நூல்களை யருளிச்செய்தவர் ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு சிறு நூலா வது அருளிச்செய்திருக்கலாம். இன்னுமொரு திருக்கோலம் பூண்டு [அதாவது, மணவாள மாமுனிகளாக அவதரித்து] அப்போது அருளிச்செய்ய வேணுமென்று திருவுள்ளம் பற்றியிருந்தமையாலே ஸ்ரீராமாநுஜரான அந்த அவதாரந்தன்னிலே ரஹஸ்யார்த்தங்களை ஏடுபடுத்தாமே சென்றனர். ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் முத லிய திவ்ய க்ரந்தங்களில் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களும் ஆங்காங்குச் சேமிக்கப் பட்டேயிருந்தாலும் அவற்றைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித் தாராத குறை குறையே. அக்குறைதீரவே ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான பிள்ளை லோகா சாரியர் திருவவதரித்து, முதன் முதலாக ஸ்ரீவைஷ்ணவ மண்டலிக்கு மஹோப காரஞ் செய்தருளினர்.

லோகாசார்ய ரென்கிற திருநாமம் முதலில் நம்பிள்ளைக்கு வழங்கி வந்தது. ஸ்வாசார்யர் திருநாமத்தையே புதல்வர்க்கு இடவேணுமென்று விருப்பங்கொண்ட இவரது திருத்தந்தையார் நம்பிள்ளையின் திருநாமத்தையே இவர்க்குச் சாத்தினர்.

வர்சி தெரிவதற்காகப் பிள்ளை லோகாசார்யரென்று வழங்குதல் நிகழ்ந்தது. உபதேச ரத்தினமாலையில்—*பின்னை வடக்குத் திருவீதிப்பிள்ளை, அன்பாலன்ன திருநாமத்தை யாதரித்து, மன்னுபுகழ் மைந்தருக்குச் சாத்துகையால் வந்துபரந்ததெங்கும், இந்தத் திருநாமமிங்கு* என்றுள்ள பாசுரத்தினுல் இஃதறியத்தக்கது. உண்மையில் லோகாசார்ய ரென்னுந் திருநாமம் இவர்க்கே தகும்.

இவ்விருள் தருமாஞாலத்தின் அகவிருளை அறவே யொழிக்கவல்ல திவ்ய ஸ்ரீஸூக்திகளைத் தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமாக அளித்தருளினவர் இம்மஹாசார்யர். இவருடைய ஸர்வஜ்ஞத்வமும் பரமகாருணிகத்வமும் பரமப்ராமாணிகத்வமும் ஒவ்வொன்றும் நெஞ்சால் நினைப்பரிதே. ஒரு அர்த்தத்திலும் ஆக்ரஹமின்றிக்கே ஆசார்யபரம்பராப்ராப்தமான அர்த்தங்களையே அற்புதமாக அமைத்திருக்குமழகு இவருடைய திவ்யக்ரந்தங்களுக்கே அஸாதாரணச் செல்வமாக விளங்கி யிருக்கும்.

இவரருளிச்செய்த நூல்கள் அஷ்டாதசரஹஸ்யமென்று ஸுப்ரஸித்தமாயிருக்கும். இவற்றில் சில நூல்கள், ரஹஸ்யங்களென்று ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் குலாவப்படும் திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்கிற மந்த்ரங்களின் பொருளை விவரிக்குமவை. சில வேதாந்த சாஸ்திரத்தில் உபதேசிக்கப்பட்ட சித், அசித், ஈச்வரன் என்பவை போன்ற பொருள்களை விளக்குமவை. மற்றும் சில ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு அஸாதாரணமான பற்பல தத்துவங்களையும் அனுட்டானங்களையும் விவரிக்கும். இந் நூல்களின் அடைவு ஸரிவர நிச்சயிக்க முடியவில்லை. இவைகளின் விவரம் வருமாறு—

(1) யாத்ருச்சிகப்படி, (2) முமுக்ஷுப்படி, (3) ச்ரிய:பதிப்படி, (4) பரந்தபடி, ஆகிய இந்நான்கு நூல்களும் கீழ்ச்சொன்ன மூன்று ரஹஸ்யங்களின் பொருட்களை விவரிக்குமவை. இவற்றில் முதல் மூன்று நூல்களும் அடைவே "யாத்ருச்சிக பகவத் கடாக்ஷத்தாலே" என்றும், "முமுக்ஷுவுக்கறியவேண்டும்" என்றும், "ச்ரிய:பதியாய்" என்றும் தொடங்கப்பட்டிருப்பதால் அவ்வவ திருநாமம் பெற்றன. மிகவும் விஸ்தாரமாயிருப்பதால் பரந்தபடியென்று திருநாமமாயிற்று. இவைகளைப்பற்றி மணவாளமாமுனிகள் முமுக்ஷுப்படி வியாக்கியான அவதாரிகையில் அருளிச்செய்திருப்பதாவது—"இனி இந்த ரஹஸ்யத்ரயந்தான் சப்தம் ஸுக்ரஹமாயிருந்ததேயாகிலும் அர்த்தம் உபதேச கம்யமாகையாலும், அதறிந்தே எல்லார்க்கும் உஜ்ஜீவிக்க வேண்டுகையாலும், அந்த ரஹஸ்யத்ரயத்திலும் பூர்வாசார்யர்களுடைய உபதேசபரம்பரா ப்ராப்தமான அர்த்த விசேஷங்களை ஸர்வர்க்கும் ஸுக்ரஹமாகவும் ஸுவ்யக்தமாகவும் பிள்ளைலோகாசார்யர் தம்முடைய பரமக்ருபையாலே இப் ப்ரபந்தமுகேந அருளிச்செய்கிறார். முன்பே ரஹஸ்யத்ரய விஷயமாக மூன்று ப்ரபந்தம் இட்டருளியிருக்கச்செய்தேயும், அதில் யாத்ருச்சிகப்படி அதிஸங்க்ரஹமாகையாலும், பரந்தபடி அதிவிஸ்த்ருதமாகையாலும், ச்ரிய:பதிப்படி உபயதோஷமுமின்றிக்கே யிருந்தபோதிலும் ஸம்ஸ்க்ருத வாக்யபஹுளமாகையாலே பெண்ணுக்கும் பேதைக்கும் அதிகரிக்கப்போகாமையாலும், த்ரிவித தோஷமுமில்லாதபடி இன்னமும் ஒரு ப்ரபந்தமிடவேணுமென்று திருவுள்ளம்பற்றி

எல்லாவற்றுக்கும் பின்பிறே முமுக்ஷுப்படியாகிற இப் ப்ரபந்தம் இட்டருளிற்று. ஆகையிறே அல்லாத ப்ரபந்தங்கள் கிடக்க இத்தை எல்லாரும் அதிகரித்துப்போரு கிறது. இன்னமும் பூர்வ ப்ரபந்தங்களில் அநுக்தமான அர்த்த விசேஷங்களும் இப் ப்ரபந்தத்தில் உண்டாகையாலும் இதுவே எல்லார்க்கும் ஆதரணீயமாயிருக்கும்.''

(5) தனித்வயம், (6) தனிசரமம், (7) தனிப்ரணவம் என்கிற மூன்று ரஹஸ்யங்கள் தனித்தனியாக த்வயமந்த்ரம், சரமச்லோகம், அஷ்டாக்ஷரத்தில் முதல் பதமாகிய ப்ரணவம், இவைகளை மட்டும் விவரிக்குமவையென்பது வெளிப்படை. திருமந்த்ரத்தில், மந்த்ரசேஷமென்று சொல்லப்படும் மேற்பகுதி ப்ரணவத்திற்கு விவரணமாகையால், அதை மட்டும் விவரிக்கும் தனி ரஹஸ்யமொன்றையும் ஸாதிக்கவில்லைபோலும்.

(8) ஸாரஸங்க்ரஹம். இது விஷயமாக ஆசார்யஹ்ருதயம் (210-வது சூர்ணையின்) வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள், ''சரமப்ரபந்தமான திருவாய்மொழியின் த்வயார்த்த ப்ரதிபாதகத்வம் விஸ்தரேண உபபாதிக்க வேண்டுகையாலும், தத்விஷயமாகத் தம்முடைய திருத்தமையனார் பிள்ளை ஒரு ப்ரபந்தம் முன்பே யிட்டருளுகையாலும் அதிலே தர்சிப்பித்துவிடக்கடவோமென்று (த்வயார்த்தம் தீர்க்கசரணாகதியென்றது ஸாரஸங்க்ரஹத்திலே) என்கிறார். அதாவது—திருவாய்மொழி பத்துப்பத்தாலும் ச்ரிய:பதித்வம் முதலாக, கைங்கர்ய விரோதி நிவ்ருத்தி பர்யந்தமாக த்வயத்தில் ப்ரதியாதிதமான பத்தர்த்தத்தையும் ‡ப்ரதிபாதிக்கையாலே த்வயார்த்தமாய்க்கொண்டு தீர்க்கசரணாகதியாயிருக்குமென்று சொல்லப்பட்டது. பிள்ளையருளிச்செய்த ஸாரஸங்க்ரஹமாகிற அந்த ப்ரபந்தமாவது தானே தென்னில், 'அகில ஜகத்திதாநுசாஸநபரமான வேதத்திலும்...........யாவச்சரீர பாதமநுஸந்தேயம்.' என்றருளிச்செய்த இப் ப்ரபந்தமென்கை. இப்படி திருவாய்மொழியினுடைய த்வயார்த்தப்ரதிபாதகத்வத்தை விசதமாக ஆசார்யர்களருளிச்செய்து வைக்கையாலே ஸ்வப்ரபந்தத்தில் வக்தவ்யாம்சத்திலே தர்சிப்பித்தாராய்த்து.'' இவ்விடத்தில் இந்த ரஹஸ்யம் முழுவதையும் ஒரெழுத்தும்விடாமல் மாமுனிகள் எழுதியிருப்பது நோக்கத்தக்கது.

(9) தத்வத்ரயம். சித் (ஜீவாத்மா), அசித் (அசேதநப்பொருள்), ஈச்வரன் (பரமாத்மா) என்கிற மூன்று தத்துவங்களையும் மூன்று ப்ரகரணங்களால் விவரிப்பது.

10. தத்வசேகரம். இதின் ஐந்து ப்ரகரணங்களில், (1) பரஸ்வரூபம் (2) ஜீவஸ்வரூபம், (3) புருஷார்த்தஸ்வரூபம், (4) விரோதிஸ்வரூபம், (5) உபாயஸ்வரூபம் ஆகிய ஐந்து விஷயங்கள், உபநிஷத்துக்கள் முதலிய பற்பல ப்ரமாணங்களின் ஆதாரத்தைக்கொண்டு, சர்ச்சித்து தெளிவாக விவரிக்கப்பட்டிருக்கின்றன. [9, 10] இவையிரண்டும் வேதாந்த ப்ரகரண நூல்களென்னத்தகும். ஸ்வாமி தாமே முமுக்ஷுப்படியில், ''தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வசேகரத்திலே சொன்னோம்'' என்று (70) அருளிச்செய்தார். அச்சமயத்தில் தத்வத்ரயம் அருளிச்செய்திருக்கவில்லை போலும்.

‡ அஷ்டச்லோகியில் பட்டர் (5) ''நேத்ருத்வம் நித்யயோகம்.........ப்ரபலதர விரோதிப்ரஹாணம் தசைதான்.........ஷட்பதோயம் த்விகண்ட:'' என்று ஸாதித்திருப்பதைக் குறிக்கொள்க.

(11) அர்த்தபஞ்சகம். தத்வசேகரத்தில் விசதமாக விவரிக்கப்பட்ட ஐந்து விஷயங்களையே சுருக்கமாகவும் கஹந சாஸ்த்ரார்த்த சர்ச்சையில்லாமல் தெளிவாகவும் இந்நூல் தெரிவிக்கும். இதிலும் ஐந்து ப்ரகரணங்கள் உள. அவைகளில் முறையே ஜீவ, ஈச்வர, புருஷார்த்த, உபாய, விரோதி ஸ்வரூபங்களும், ஒவ்வொன்றிலும் ஐந்து உட்பிரிவுகளும் விளக்கப்பட்டிருக்கின்றன.

(12) அர்ச்சிராதியில், அநாதிகாலமாக ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கிக் கிடந்து நோவுபடும் இச்சேதனன் பகவத்க்ருபை காரணமாக அத்வேஷம் முதலிய குணங்களைப்பெற்று, ஸதாசார்ய ஸமாச்ரயணம்பண்ணி, உரிய காலத்தில் சரீரத்தை விட்டு, அர்ச்சிராதிமார்கத்திலே சென்று, ஆதிவாஹகர்களால் பூசிக்கப்பட்டு, வைகுந்தத்தையடைந்து, அங்கும் விசேஷஸத்காரங்களைப்பெற்று, ஸபரிவாரனை எம்பெருமானை ஸேவித்து, நித்யகைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கும் க்ரமம் மிகவற்புதமாக விவரிக்கப்பட்டுள்ளது. ப்ரபன்னர்கள் நித்யபாடம் செய்யவேண்டிய திவ்யக்ரந்தமாமிது. முமுக்ஷுப்படியில் (27) "பலமிருக்கும்படி ப்ரமேயசேகரத்திலும் அர்ச்சிராதிகதியிலும் சொன்னோம்" என்று ஸ்வாமி தாமே அருளிச்செய்தார்.

(13) ப்ரமேயசேகரமென்கிற மிகச்சிறிய நூலில் ஸம்ஸாரி சேதனனுக்கு அஜ்ஞாதஸுக்ருதாதிகள் உண்டாவது, சரீரத்தை விட்டுப் புறப்படுவது, திவ்யதேஹமுண்டாவது, திவ்யபாரிஷதர்களை ஸேவிப்பது, ஸர்வதேசஸர்வகாலஸர்வாவஸ்த்தோசித ஸர்வவித கைங்கர்யங்களும் செய்யப்பெறுவது, ஆகியவை விவரிக்கப்பட்டுள்ளன.

14. ஸம்ஸாரஸாம்ராஜ்யமென்கிற அற்புதமான சிறிய நூலில் (ஸ்ரீ பாகவதத்தில் புரஞ்ஜநோபாக்யாநத்தில் சொன்னதுபோல) ஒரு சேதநன் ஸம்ஸாரஸுகங்களை யநுபவிக்கும் விநோதமும், ஈச்வரனுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தால் அவனுக்கு அத்வேஷாதிகள் பிறந்து, சைதன்யம் குடிபுகுந்து, இழந்த நாளுக்கு அநுதபித்து, ஆசார்யனிடத்தில் க்ருதஜ்ஞதையும் பகவத்விஷயத்தில் ப்ரீதியுமுண்டாக, பிராட்டி புருஷகாரத்தால் எம்பெருமான் எல்லாவபேக்ஷிதங்களையும் தந்தருளும்படி அறிவிக்கப்பட்டுள்ளது.

(15) நவரத்னமாலை. இச்சிறிய நூலில் ப்ரபந்நனுனவன், (1) தான், (2) தனது உடல், (3) உறவினர், (4) ஸம்ஸாரிகள், (5) புறதெய்வங்கள், (6) ஸ்ரீவைஷ்ணவர்கள், (7) ஆசிரியன், (8) பிராட்டி, (9) எம்பெருமான் ஆகியவரை நினைக்கவேண்டும் ப்ரகாரம் அழகாக அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

(16). நவவிதஸம்பந்தம். நம் பூர்வாசார்யர்கள் ஜீவபரர்களிடையே, "பிதா ச ரக்ஷக: சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:, ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்யமநூதித:." என்று பேசப்பட்ட ஒன்பது ஸம்பந்தங்கள் திருமந்த்ரத்தால் காட்டப்படுமென்று ஸாதிப்பர்கள். இவ்வொன்பதும் இந்த ரஹஸ்யத்தில் விளக்கப்பட்டுள்ளன.

(17) ப்ரபன்னபரித்ராணத்தில் முமுக்ஷுவுக்கு அநந்யகதித்வமும் ஆகிஞ்சன்யமும் அவச்யாபேக்ஷிதமென்று காட்டப்பட்டது. இவைகளில் அநந்யகதித்வ

மாவது, நம்மை தாய்தந்தையர், உடன்பிறந்தவர், மக்கள் முதலிய உறவினரும் தேவர்களும் ரக்ஷிக்கமாட்டார்களென்றும், ஈச்வரன் ஒருவன் தான் ரக்ஷிக்கவல்ல னென்றும் அறிகை. ஆகிஞ்சன்யமாவது, நம் ஸ்வரூபம் எல்லாவகையாலும் ஈச்வர னுக்குப் பரதந்த்ரமாகையாலே கர்மஜ்ஞாநாதிகளில் அன்வயித்து நம் கார்யத் துக்கு நாம் கடவோமல்லோம் என்று துணிந்திருக்கை. "ஈச்வரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்த பரித்ராணத்திலே சொன்னோம்" என்று முமுக்ஷுப் படியில் ஸ்வாமி தாமே ஸாதித்தபடி.

18. ஸ்ரீவசனபூஷணம். ஸ்வாமி அருளிச்செய்த நூல்களெல்லாவற்றிலும் மிகச் சிறந்ததும் ஒப்புயர்வற்றதுமாகும் இந்நூல். ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தஸார மெல்லாம் இதனுள் அடங்கியிருக்கிறதென்றால் மிகையாகாது. இதில் பற்பல விஷ யங்கள் நிரூபிக்கப்பட்டிருந்தாலும், முக்கியமான வர்த்தங்கள் ஆறு தான் என்பர் கள்; ஒன்பது அர்த்தங்கள் என்பாருமுளர். ஆறு அர்த்தங்களாவன—(1) புருஷ காரவைபவமும் ஸித்தோபாயவைபவமும், (2) சரணாகதியின் சிறப்பு, (3) அதிகாரி (அதாவது ப்ரபன்னனின்) நிஷ்டை, (4) ஆசார்யாநுவர்த்தனக்ரமம், (5) நிர் ஹேதுகபகவத்க்ருபாவைபவம், (6) ஆசார்யனே உபாயமென்பது. ஒன்பது அர்த்தங் களாவன—(1) புருஷகார, உபாயவைபவம், (2) சரணாகதியின் சீர்மை, (3) உபா யாந்தரங்களின் கொடுமை, (4) ஸித்தோபாயநிஷ்டவைபவம், (5) ப்ரபன்ன தினசர்யை, (6) ஸதாசார்யலக்ஷணம், (7) ஸச்சிஷ்யலக்ஷணம், (8) நிர்ஹேதுக க்ருபையின் சிறப்பு, (9) சரமப்ராப்ய ப்ராபகங்கள்—என்பவை.

ஸ்ரீ வசனபூஷணத்தின் பெருமை அப்ரமேயமென்று மணவாளமாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் ஏழு பாசுரங்களினால் மிக மிகக் கொண்டாடியருளுகிறார். *ஸர்வஜ்ஞ லோக குருநிர்மிதமார்யபோக்யம் வந்தே ஸதா வசனபூஷண திவ்யசாஸ்த்ரம்* என்று இந்த திவ்யக்ரந்தத்தை ஒரு திவ்யசாஸ்த்ரமென்றே வழங்குவர் பெரியார். இதற்கு மணவாளமாமுனிகளருளிச் செய்த வியாக்கியானத்தின் அவதாரிகையிலுள்ள சில ஸ்ரீஸூக்திகளை இங்கெடுத்துக்காட்ட வேண்டியது அவசியமாகிறது,—"ஸம்ஸாரி சேதநரிழவு ஸஹிக்கமாட்டாத பரமக்ருபையாலே தது்ஜ்ஜீவநார்த்தமாகத் தாமும் பல ப்ரபந்தங்களருளிச்செய்த பிள்ளை லோகாசார்யர், ஆசார்ய பரம்பரப்ராப்தங் களான அர்த்தங்களில், அவர்கள் தாங்கள் கௌரவாதிசயத்தாலே ரஹஸ்யமாக உபதேசித்துப் போந்தவையாய், அருமைபெருமைகளைப்பற்ற இதுக்கு முன்பு தாமும் ப்ரகாசிப்பியாமல் அடக்கிக்கொண்டு போந்தவையான அர்த்த விசேஷங் களெல்லாவற்றையும் பின்புள்ளாருமிழக்க வொண்ணாதென்கிற தம்முடைய க்ரு பாதிசயத்துக்கு மேலே பெருமாளும் ஸ்வப்நத்திலே திருவுள்ளமாயருளுகையாலே ஸ்ரீவசனபூஷணமாகிய இப்ப்ரபந்த முகேந வெளியிட்டருளுகிறார். முன்பே பேரரு ளாளப் பெருமாள் தம்முடைய நிர்ஹேதுகக்ருபையாலே மணல்பாக்கத்திலே யிருப்பாரொரு நம்பியாரை விசேஷ கடாக்ஷம் பண்ணியருளி தஞ்சமாயிருப்பன சில அர்த்த விசேஷங்களைத் தாமே அவர்க்கு ஸ்வப்நமுகேந அருளிச்செய்து 'நீர்போய் இரண்டாற்றுக்கு நடுவே வர்த்தியும்; இன்னமுமக்கு இவ்வர்த்தங்களை யெல்லாம் விசதமாக நாம் அங்கே சொல்லுகிறோம்' என்று திருவுள்ளமாயருளுகையாலே அவரிங்கே வந்து (பெரிய) பெருமாளை ஸேவித்துக் கொண்டு, தமக்கு முன்பு அங்கரு

ளிச்செய்த அர்த்தங்களையும் அசலறியாதபடி அநுஸந்தித்துக்கொண்டு ஏகாந்த மானதொரு கோயிலிலே வர்த்தியா நிற்கச்செய்தே, தம்முடைய ஸ்ரீ பாதத்துக்கு அந்தரங்கரான முதலிகளும் தாமுமாகப் பிள்ளை ஒருநாள் அந்தக்கோயிலிலே யாத் ருச்சிகமாக வெழுந்தருளி, அவ்விடம் ஏகாந்தமாயிருக்கையாலே ரஹஸ்யார்த்தங் களை அவர்களுக்கருளிச் செய்துகொண்டு எழுந்தருளியிராநிற்க, அவை தமக்குப் பேரருளாளப் பெருமாளருளிச்செய்த அர்த்தவிசேஷங்களாயிருக்கையாலே அவர் போர வித்தராய் உள்ளில் நின்றும் புறப்பட்டு வந்து பிள்ளை ஸ்ரீபாதத்திலே விழுந்து 'அவரோ நீர்?' என்ன, 'ஆவதேது?' என்று பிள்ளை கேட்டருள, பேரரு ளாளப் பெருமாள் தமக்கு இவ்வர்த்தங்களை ப்ரஸாதித்தருளின படியையும் இத் தேசத்திலே போகவிட்டருளின படியையும் இன்னும் உமக்கங்கே விசதமாகச் சொல்லுகிறோ மென்றருளிச் செய்தபடியையும் விண்ணப்பஞ் செய்யக் கேட்டு மிக வும் ஹ்ருஷ்டராய் அவரையும் அபிமானித்தருள, அவரும் அங்குத்தைக்கு அந்தரங் கராய் வர்த்திக்கிற நாளிலே, பெருமாள் அவர்க்கு ஸ்வப்நத்திலே 'இவ்வர்த்தங்கள் மறைந்து போகாதபடி இவற்றை யொருப்ரபந்தஸ்தமாக்கச் சொன்னோமென்று நீர் பிள்ளைக்குச் சொல்லும், என்று திருவுள்ளமாக, அவர் 'இப்படி பெருமாள் திரு வுள்ள மாயருளினார்' என்று விண்ணப்பஞ்செய்ய, 'ஆனால் அப்படிச் செய்வோம்' என்று திருவுள்ளம்பற்றி அனந்தரம் இப்ப்ரபந்தமிட்டருளினா ரென்று ப்ரஸித்த மிறே'' என்பவை மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸூக்திகள்.

மணவாள மாமுனிகள் ஆழ்வார் திருநகரியிலிருந்து திருவரங்கம் பெரிய கோயிலுக் கெழுந்தருளினபோது அங்கே பிள்ளை லோகாசார்ய ரெழுந்தருளியிருந்த விடத்திற்கு நித்திய மெழுந்தருளி ''ரஹஸ்யம் விளைந்தமண்'' என்று அவ்விடத்தே போர ப்ரதிபத்தி பண்ணி உகந்திருப்பர் என்று ப்ரஸித்தம்.

பிள்ளை லோகாசார்யர் வைபவம் முற்றிற்று.

இவரருளிச் செய்த அஷ்டாதசரஹஸ்யங்களுள் மணவாளமாமுனிகள் வியாக்கியானித்தருளியவை ஸ்ரீவசனபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்னு மிம் மூன்று ரஹஸ்யக்ரந்தங்களாதலால், அவற்றில் உபந்யாஸகர்கள் கையாண்டு ஸதஸ்யர்களை ரஞ்ஜிப்பிக்கக்கூடிய சில சூர்ணைகளை யெடுத்தநுபவிக்கிறோம்.

## ஸ்ரீவசனபூஷணத்தில்

ப்ரபத்தி வைபவத்தையருளிச்செய்து வருகையில் ஆழ்வார்களின் ப்ரபத் திக்கு இலக்கான அர்ச்சாவதாரத்தின் பெருமை ப்ரஸக்தமாக, அவ்விடத்து அருளிச் செய்த சூர்ணிகை வருமாறு;—

40. ''இதுதான் சாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாதே, விஷயாந்தரங் களிலே மண்டி விமுகராய்ப்போரும் சேதநர்க்கு வைமுக்க்யத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய், ருசிபிறந்தாலுபாயமாய், உபாயபரிக்ரஹம் பண்ணினால் போக்யமு மாயிருக்கும்.''

(தாற்பரிய ஸாரம்) ஹிதங்களை விதிக்கிற ச்ருதிஸ்ம்ருதி முதலிய சாஸ்த்ரங்க ளானவை விஷயாந்தரங்களிலே அருசி பிறக்கும்படி அவற்றின் குற்றங்களையும், பகவத்

விஷயத்தில் ருசி பிறக்கும்படி அதின் மேன்மையையும் உபதேசித்தாலும் அவற்றாலே விஷயாந்தரங்களை விட்டு பகவத் விஷயத்தைப் பற்றமுடியாமல் துர்வாஸநா பலத்தாலே விஷயாந்தரங்களிலே அளவற்ற அபிநிவேசத்தை வைத்து 'பகவத் விஷய' மென்றால் கண்ணெடுத்தும் பார்க்க இசையாதிருக்கிற சேதநர்கட்கு, தன் அழகு முதலியவற்றாலே நெஞ்சைக் கவர்ந்து, தன்னைக் காணவேண்டாமென்றிருந்த வைமுக்க்யத்தை மாற்றி, கண்ட கண் மாறவைக்கமாட்டாதபடி ருசியை உண்டு பண்ணக் கடவதாய், இப்படி தன் வைலக்ஷண்யத்தைக் காண்கையாலே தன்னை 'நித்யாநுபவம் பண்ணப் பெறவேணும்' என்கிற ருசி பிறந்தபின், ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வகமாகத் தன்னை அடைகைக்குத் தானே ஸாதநமாய், தன்னை ஸாதநமாகப் பரிக்ரஹித்தால் ஸாத்யம் கைபுகுவதற்கு ஒரு தேசவிசேஷத்திலே போமளவும் பார்த்திருக்க வேண்டாதே "எனக்குத் தேனே பாலே கன்னலேயமுதே திருமாலிருஞ் சோலைக் கோனே" என்கிறபடியே போக்யமாயிருக்கையாலே தானே உபேயமுமாயிருக்கும்—இவ்வர்ச்சாவதாரம்.

66. "உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்" என்கிறபடியே ப்ராப்திக்கு உபாயம் அவன் நினைவு. 67. அதுதானெப்போதுமுண்டு. 68. அது பலிப்பது இவன்னினைவு மாறினால்."

இப்படி இவன் பக்கல் உள்ளதொன்றும் உபாயமன்றாகில் இவன் எம்பெருமானை அடைவதற்கு உபாயந்தானேதென்னில்; "உன்மனத்தாலென் நினைந்திருந்தாய்" என்று ஆழ்வார் அநுஸந்தித்தபடியே இச்சேதநன் உஜ்ஜீவிப்பதற்கான அவனுடைய நினைவே அவனைப் பெறுதற்கு உபாயம்; அந்நினைவு அவனுக்கு ஸர்வ காலத்திலுமுண்டு. ஆனால் அது இந்நாள்வரை பலியாதிருப்பானேன் என்னில்; இச்சேதநனுடைய ஸ்வரக்ஷண சிந்தை மாறினால் தான் அவனுடைய நினைவு இவனுக்குக் காரியகரமாகும்.

70. "ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானு மவனே."

அடைவிக்கிறவன் ஈச்வரனானாலும், அடைகிறவனும் அடைந்து உகக்குமவனும் இவனன்றோ; ஆனபின்பு இவனுடைய நினைவை இப்படி அடியோடு துடைக்கலாமோ வென்னில்; அடைகிறவனும் அடைந்து உகப்பவனும் இச்சேதநனல்லன்; உடைமையை அடைகின்ற உடையவனைப்போலே ஸ்வம்மான இவ்வாத்மாவை அடைபவன் ஸ்வாமியான அவனே; இழந்த பொருளைப்பெற்றால் அதை அனுபவிக்கிற ஸ்வாமியே களிக்குமாபோலே இவ்வாத்மாவைப் பெற்றால் உகக்குமவனும் அவ்வெம்பெருமானே யாவன்.

73. "அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிற அந்தரங்க நிரூபகம்."

சேஷத்வாதிகளும் ஜ்ஞாத்ருத்வாதிகளும் ஆத்ம தர்மங்களாயிருக்கச் செய்தே சேஷத்வாதிகளை முக்கியமாக்கி ஜ்ஞாத்ருத்வாதிகளைச் சேஷத்வாதிகளுக்குத் தகுதியாக யோஜிப்பதற்கு நியாமகமேதென்னில்; ஜ்ஞாத்ருத்வத்தை மாத்திரம் ஆத்மாவுக்கு லக்ஷணமாகச் சொன்னால் ஈச்வரனுக்கும் அந்த ஜ்ஞாத்

ருத்வ முண்டாகையாலே அவ்விடத்தில் அதிவ்யாப்திவரும்: அதைப் பரிஹரிப்பதற்காகச் சேஷத்வத்தையும் லக்ஷண கோடியிற் சேர்க்கவேண்டும்; சேஷத்வத்தை மாத்திரம் லக்ஷணமாக சொல்லுவோமென்றால், அசித்துக்கும் சேஷத்வமுண்டாகையாலே அங்கு அதிவ்யாப்தி வரும்; அதைப் பரிஹரிப்பதற்காக ஜ்ஞாத்ருத்வமுங்கூட நிவேசிக்க வேண்டும்; ஆகவே ஜ்ஞாத்ருத்வத்தோடு கூடின சேஷத்வம் ஆத்ம லக்ஷணமென்றதாயிற்று. இதில் ஞாத்ருத்வத்திற் காட்டில் சேஷத்வமே ஆத்மாவுக்கு முக்கியமான நிரூபகம்; ஏனெனில்; ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவிற்காட்டிலும் வேறுபடுத்துகை நிரூபகத்வமாவது; கீழ் உபபாதித்தபடி சேஷத்வமும் ஜ்ஞாத்ருத்வமுமாகிற இரண்டு நிரூபகங்களும் ஆத்மாவுக்கு அபேக்ஷிதங்களாயிருக்கச் செய்தே, எம்பெருமானுக்கு அடிமைப்பட்டே ஸத்தை பெறக்கடவதான இவ்வாத்ம வஸ்துவுக்கு அசித்திற்காட்டில் வாசியை அறிவிக்கிற ஜ்ஞாத்ருத்வம் முக்கியமாகக் கூடுமா? ஈச்வரனிற்காட்டிலும் வாசியை அறிவிக்கிற சேஷத்வம் முக்கியமாகக் கூடுமா? என்று ஆராயுமளவில், ஜ்ஞாத்ருத்வம் ஆத்மாவுக்குப் புறவிதமென்னும்படி சேஷத்வமே அந்தரங்க நிரூபகமெனக்கொள்ள வேண்டுமன்றோ? ஆத்ம லக்ஷணத்திலே சேஷத்வத்தை நிவேசியாதொழில் ஜ்ஞாத்ருத்வமாத்ரத்தால் ஆத்மாவும் ஈச்வரனும் ஒன்று என்னவேண்டி வருகிற அத்வைதத்தை சேஷத்வமிறே கண்டிக்கிறது. அதுவன்றோ முக்கியமாகக் கடவது.

243. "இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் நாசஹேதுவான அஹங்காரத்துக்கும் அதினுடைய கார்யமான விஷய ப்ராவண்யத்துக்கும் விளைநிலம் தானாகையாலே தன்னைக் கண்டால் சத்ருவைக் கண்டாற்போலேயும், அவற்றுக்கு வர்த்தகரான ஸம்ஸாரிகளைக் கண்டால் ஸர்ப்பத்தைக் கண்டாற்போலேயும், அவற்றுக்கு நிவர்த்தகரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் பந்துக்களைக் கண்டாற் போலேயும், ஈச்வரனைக் கண்டால் பிதாவைக் கண்டாற்போலேயும், ஆசார்யனைக் கண்டால், பசியன் சோற்றைக் கண்டாற்போலேயும், சிஷ்யனைக் கண்டால் அபிமதவிஷயத்தைக் கண்டாற்போலேயும் நினைத்து, அஹங்காரார்த்த காமங்கள் மூன்றும் அநுகூலர் பக்கல் அநாதரத்தையும் ப்ரதிகூலர் பக்கல் ப்ராவண்யத்தையும் உபேக்ஷிக்குமவர்கள் பக்கலபேக்ஷையையும் பிறப்பிக்கு மென்றஞ்சி, ஆத்மகுணங்கள் நம்மாலும் பிறராலும் பிறப்பித்துக் கொள்ளவொண்ணாது, ஸதாசார்ய ப்ரஸாதமடியாக வருகிற பகவத் ப்ரஸாதத்தாலே பிறக்குமத்தனையென்று துணிந்து தேஹ யாத்திரையிலுபேக்ஷையும் ஆத்மயாத்திரையிலபேக்ஷையும் ப்ராக்ருத வஸ்துக்களில் போக்யதாபுத்தி நிவ்ருத்தியும் தேஹதாரணம் பரமாத்ம ஸமாராதன ஸமாப்தி ப்ரஸாதப்ரதிபத்தியென்கிற புத்தி விசேஷமும் தனக்கொரு க்லேசமுண்டானால் கர்மபல மென்றுதல் க்ருபாபல மென்றுதல் பிறக்கும் ப்ரீதியும், ஸ்வாநுஷ்டானத்தில் ஸாதநத்வ புத்தி நிவ்ருத்தியும்; விலக்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களில் வாஞ்சையும், உகந்தருளின நிலங்களிலாதராதிசயமும், மங்களாசாஸநமும், இதர விஷயங்களில் அருசியும், ஆர்த்தியும், அநுவர்த்தந நியதியும்; அநுகூல ஸஹவாஸமும், ப்ரதிகூல ஸஹவாஸ நிவ்ருத்தியும் ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்."

[ இனி, ப்ரபந்நாதிகாரியின் திநசர்யாவிசேஷம் சொல்லப்படுகிறது. ] இப்படி எல்லாப்படியாலும் ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்ல அஹங்காரத்துக்கும் அதனாலே உண்டாகக்கூடிய விஷயப்ராவண்யத்துக்கும் பிறப்பிடம் தானாகையாலே, தன்னைக் கண்டால் சத்ருவைக் கண்டாற்போலே குடல் கரித்துத் தன்னையே தனக்கு நாசகனாக நினைக்கவேணும்; அந்த அஹங்காரத்தையும் விஷய ப்ராவண்யத்தையும் துர்ப்போதனைகளாலே வளரச் செய்கிற ஸம்ஸாரிகளைக் கண்டால் ஸர்ப்பத்தைக் கண்டாற்போலே அஞ்சி நடுங்கிப் பிற்காலித்திருக்கவேணும்; அக்குற்றங்களை உபதேசாதிகளாலே போக்கவல்ல ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் ஆப்த பந்துக்களைக் கண்டாற்போலே "இவர்கள் நமக்கு நல்துணையாவர்கள்" என்று ஆதரிக்கவேணும்; எப்போதும் நம்முடைய ஹிதமே பார்த்துப் போருகிற ஈச்வரனைத் திருப்பதிகளிலே ஸேவிக்கப் பெற்றால் ஹிதைஷியான பிதாவைக் கண்டாற்போலே பக்தி ப்ரீதி விநயங்களை யுடையனாயிருக்கவேணும்; ஜ்ஞாந பக்தி விரக்திகளை விளைத்து பகவத் விஷயத்தைக் காட்டித் தரும் மஹோபகாரகனான ஆசார்யனைக் கண்டால் பெரும்பசியன் சோற்றைக் கண்டாற்போலே மிக விருப்பத்தோடே அநுபவித்து உகந்திருக்கவேணும்; தன் சொல்வழி யொழுகும் சிஷ்யனைக் கண்டால் அபிமத விஷயத்தைக் கண்டாற்போலே நினைத்து உள் குழைந்திருக்கவேணும்; அஹங்காரம், அர்த்தம், காமம் இவை மூன்றின் கெடுதல்களை நன்கு சிந்திக்கவேணும்; அஹங்காரமானது அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்திலே அநாதரத்தைப் பண்ணுமென்றும்; அர்த்தமானது ப்ரதிகூலரான ஸம்ஸாரிகளோடே உறவு பண்ணுவிக்குமென்றும், காம [விஷய ஸம்போக ஸுக]மானது தன்னை இகழ்ந்து பிடரியைப் பிடித்துத் தள்ளுகிறவர்களிடத்திலும் விருப்பம் பிறப்பிக்குமென்றும் நன்கு ஆய்ந்து ஓய்ந்து உணர்ந்து பயப்படவேணும்; "சமம் தமம் முதலிய ஆத்ம குணங்கள் நம்முடைய முயற்சியாலும் கர்மவச்யராயிருக்கிற பிறருடைய முயற்சியாலும் பிறப்பித்துக் கொள்ள முடியாது; ஆசார்யனுடைய அநுக்ரஹ மூலமாக வருகிற எம்பெருமானுடைய அருளாலேதான் பிறக்கவேணும்" என்று துணிவு உண்டாகவேணும்; "தேஹ ரக்ஷணத்துக்கு உறுப்பான வியாபாரங்களில் விருப்பமற்றிருக்கவேணும்; பகவத் குணாநுபவ கைங்கர்ய ப்ரவ்ருத்திகளை மேன்மேலு மாசைப்பட்டிருக்கவேணும்; சோறு கூறை முதலிய ப்ராக்ருத வஸ்துக்களில் போக்யதா புத்தி தவிர்ந்திருக்கவேணும்; தேஹம் தரித்திருப்பதற்குப் போதுமான அளவு புஜிப்பதானது எம்பெருமானுடைய திருவாராதநத்தின் ஸமாப்தி ரூபமான ஒரு ப்ரதிபத்திகர்மம் என்று நினைத்திருக்கவேணும்; இந்த சரீரத்தோடேயிருக்கிற தனக்குத் தாபத்ரயத்தினுள் ஏதேனுமொரு வருத்தமுண்டானால் "இது அநுபவித்தே தீரவேண்டிய ப்ராரப்த கர்மத்தின் பலமன்றோ; இப்படிப்பட்ட கருமங்கள் உள்ளவை கழியும் வரையிலன்றோ இந்த சரீரத்தோடு எம்பெருமான் நம்மை வைக்கிறது; அவனை அணுகுவதற்குத் தடையானவற்றிலே ஒன்றாகிலும் கழியப்பெற்றோமே!" என்று அநுஸந்தித்தாவது (அல்லது) "துர்வாஸனையாலே இவ்வுடம்பை விடமாட்டாமல் சுவையற்ற விஷயங்களை யநுபவித்துக்கொண்டு ஸம்ஸாரத்துக்குள்ளே பொருந்தியிருக்கிற நம்மை இதில் நின்றும் கொண்டுபோக நினைக்கிற ஈச்வரன் இந்த சரீரத்தில் நமக்கு வெறுப்பு உண்டாவதற்காகவன்றோ இப்படி துக்கங்களை அநுபவிப்பிக்கிறான்; அவனுடைய க்ருபையின் பலமன்றோ இது" என்று அநுஸந்தித்தாவது தேறி

யிருக்கவேணும்; ப்ரபந்நனை தன்னுடைய அதிகாரத்துக்குத் தகுதியாக அனுஷ்டித்துக்கொண்டு போருகிற நல்லொழுக்கங்களைப் பேற்றுக்கு உபாயமாக நினையாதிருக்க வேணும், விலக்ஷணருடைய ஞானமும் அனுட்டானமும் நமக்கு உண்டாக வேணுமென்று ஆசைப்படவேணும்; திவ்ய தேசங்களில் அபிநிவேசம் கரைபுரண்டிருக்கவேணும்; மங்களாசாஸநத்தில் ஊற்றமுற்றிருக்கவேணும்; விஷயாந்தரங்களைக் காறி உமிழ வேணும்; "கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ" என்று ஆர்த்தியோடே யிருக்கவேணும்; பகவத் பாகவத விஷயங்களில் தனது சேஷத்வத்துக்கு தகுதியாகச் செய்யும் இழி தொழில்களையும் விநயோக்திகளையும் ஸம்ஸாரிகள் விஷயத்திலே மறந்தும் செய்யாதொழியவேணும்; எம்பெருமானுடையவும் பாகவதருடையவும் ப்ரஸாதங்களான வஸ்துக்களையே ஆஹாரமாகக் கொள்ளுவது தவிர மற்றவற்றைக் கொள்ளக் கடவோமல்லோம் என்றிருக்கவேணும்; ஜ்ஞாநாநுஷ்டானங்களை வளர்க்கவல்ல அநுகூலரை ஒருநொடிப் பொழுதும் விட்டுப் பிரியாமலும், ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்ல ப்ரதிகூலரைக் கண்டெடுத்துப் பாராமலிருக்க வேணும்; ஆக இவை யித்தனையும் ஆசார்யனுடைய அநுக்ரஹத்தாலே விளையக் கூடியவை யாதலால் அவ்வநுக்ரஹம் பரிபக்வமாம்படி சுச்ரூஷையிலே ஊன்றி நடந்து கொண்டால் இவையெல்லாம் கைகூடும்.

381. "த்ரிபாத் விபூதியிலே பரிபூர்ணனுபவம் நடவா நிற்க, அது உண்டது உருக்காட்டாதே, தேசாந்தரகதனான புத்ரன் பக்கலிலே பித்ரு ஹ்ருதயம் கிடக்குமாபோலே, ஸம்ஸாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய், இவர்களைப் பிரிந்தால் ஆற்றமாட்டாதே, இவர்களோடே கலந்து பரிமாறுகைக்குக் கரணகளேபரங்களைக் கொடுத்து, அவற்றைக்கொண்டு வ்யாபரிக்கைக்கீடான சக்தி விசேஷங்களையும் கொடுத்து, கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றுதபடி, உறங்குகிற ப்ரஜையைத் தாய் முதுகிலே யணைத்துக்கொண்டு கிடக்குமாபோலே, தானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாக விடமாட்டாதே, அகவாயிலே அணைத்துக்கொண்டு, ஆட்சியில் தொடர்ச்சி நன்றென்று விடாதே, ஸத்தையை நோக்கியுடன்கேடனாய், இவர்கள் அஸத்கர்மங்களிலே ப்ரவர்த்திக்கும்போது மீட்கமாட்டாதே, அநுமதி தானத்தைப் பண்ணி உதாஸீநரைப் போலேயிருந்து மீட்கைக் கிடம்பார்த்து, நன்மையென்று பேரிடலாவதொரு தீமையும் காணுதே நெற்றியைக் கொத்திப் பார்த்தா லொருவழியாலும் பசைகாணு தொழிந்தால் அப்ராப்யமென்று கண்ண நீரோடே மீளுவது; தனக்கேற இடம்பெற்றவளவிலே, என்னூரைச் சொன்னாய் என்பேரைச்சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக் கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்றுப்போலே சிலவற்றை யேறிட்டு, மடிமாங்காயிட்டு, பொன்வாணியன் பொன்னை உரைகல்லிலே யுரைத்து மெழுகாலே யெடுத்து கால் கழஞ்சென்று திரட்டுமாபோலே, ஜந்ம பரம்பரைகள் தோறும், யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிக மென்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே யவற்றை ஒன்றுபத்தாக்கி நடத்திக்கொண்டுபோரும்".

[கீழ் 366-ஆம் ஸூத்ரத்தில் "பகவத் குணநு ஸந்தாநம் அபயஹேது" என்றதை விளக்குதற்காக ஈச்வரன் இவ்வாத்மோஜ்ஜீவநத்துக்குப் பண்ணும் க்ருஷி பரம்பரை பேசப்படுகிறது] ஸ்ரீவைகுண்டத்திலே எம்பெருமான் நித்யர்களோடும் முக்தர்களோடும் கூடிப் பரிபூர்ணநுபவம் பெருநிற்கச்செய்தேயும் அதனுல் அப்பெருமான் சிறிதும் மகிழாது, பல பிள்ளைகளைப் பெற்ற ஒரு தகப்பனுர் ஒரு மகன் மாத்திரம் தேசாந்தரத்திலிருக்க மற்ற எல்லாப் புத்திரர்களோடுங் கூடி வாழாநின்றுலும் அதனுல் மகிழ்ச்சியடையாமல் தேசாந்திரத்திலுள்ள புத்திரனது பிரிவையே நினைத்துப் பரிதபித்திருக்குமாபோலே எம்பெருமானும் ஸம்ஸாரிகளான அஸ்மதாதிகளின் பிரிவையே நினைத்துப் பரிதாபமுற்று நம்மோடே கலந்து பரிமாறுவதற்காகக் கரணகளேபரங்களை நமக்குத் தந்தருளி அவற்றைக்கொண்டு நாம் காரியம் செய்யும்படியான சக்தி விசேஷங்களையும் நமக்குக் கொடுத்து, மிகவும் அஹங்காரிகளான நம்மெதிரில் தான் ப்ரத்யக்ஷமாகவந்து நின்றுல் நாம் பொறுமைகொண்டு ஆணையிட்டாகிலும் தன்னைத் துரத்திவிடுவோமென்றெண்ணி ஒருவர் கண்ணுக்குந் தோற்றுதபடி, உறங்குகிற குழந்தையைத் தாயானவள் முதுகிலே அணைத்துக் கொண்டு கிடக்குமாபோலே எம்பெருமான்றுனும் தானறிந்த ஸம்பந்தமே காரணமாக நம்மை விடமாட்டாமல் அந்தர்யாமியாயிருந்து தொடர்ந்துகொண்டு நம்மையொருகாலும் கைவிடாமல் ஸத்தையை நோக்கிக்கொண்டு நமக்குத் துணையாய்ப் போருமளவில், நாம் கெட்ட காரியங்களிலே கைவைத்தோமாகில் நம்மைத் திருப்பமாட்டாமல் அநுமதிபண்ணி உதாஸீநரைப் போலேயிருந்து திருப்புகைக்கு இடம் பார்த்துக்கொண்டேயிருந்து, நாம் செய்கிற தீமைகளிலே ஏதேனுமொரு தீமையாவது நன்மையென்று பேரிடக்கூடியதாயிருக்குமோவென்று பார்த்துவந்து, அப்படிப்பட்ட தீமைகளைக் கண்டுபிடித்து "என் ஊரைச் சொன்னுய், என் பேரைச் சொன்னுய், என்னடியாரை ரக்ஷித்தாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்" என்றிப்படி சில ஸுக்ருதங்களை ஏறிட்டு மடிமாங்காயிட்டு, தட்டானிடத்தில் யாரோனும் பரீக்ஷைக்குக் காட்டின பொன்னை அவன் உரைகல்லிலே உரைத்து ஒன்றும் சேராதபடி மெழுகாலே ஒத்தியெடுத்து நாள்வட்டத்திலே "கால் பொன்னுயிற்று, கழஞ்சு பொன்னுயிற்று" என்று திரட்டுமாபோலே சேதநருடைய ஜந்ம பரம்பரைகள் தோறும் "விடாயைத் தீர்த்தாய், ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்" என்றுற்போலே உண்டாக்குகிற †யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகம் என்கிற ஸுக்ருத விசேஷங்களைத் தானே கல்பித்தும் அப்படி கல்பித்தவற்றை ஒன்றை அநேகமாக்கியும் நடத்திக்கொண்டு போருவன்.

---

† விஷயப்ரவணனுய் வேசிகளைப் பின்தொடர்ந்து அடிக்கடி கோவில்களிலே நுழைந்து புறப்படுகை, வயலில் பட்டிமேய்ந்த பசுவை அடிப்பதாகத் துரத்திக்கொண்டு போகும்போது அது ஒரு கோவிலை ப்ரதக்ஷிணம் பண்ணிக்கொண்டு ஓடுகிற வளவிலே அதை விடமாட்டாத ஆக்ரஹத்தாலே தானும் அக்கோவிலை வலஞ்செய்கை; (சிசுபாலாதிகளைப்போலே) நிந்தை செய்வதற்காகவாவது திருநாமங்களைச் சொல்லுகை முதலியன.